# வீரபாண்டியன் தமிழ் வாசகம்



நான்காம் வகுப்பு

ஆசிரியர்: இராசாம்பாள் கோவிந்தராசன், M.A., L.T.

பதிப்பாசிரியர்கள்: மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை.
த. சே. உமாபதி, M.A., L.T.






...யஷன் பப்ளிஷிங் ஹௌஸ்
சென்னை. 1

வீரபாண்டியன்

# தமிழ் வாசகம்

(நான்காம் புத்தகம்)



ஆசிரியர் :

இராசாம்பாள் கோவிந்தராசன், M. A. L. T.

தலைமை ஆசிரியை, லேடி. எம். ஸி. டி. பெண்கள்
உயர்நிலைப் பள்ளி, சென்னை.

பதிப்பாசிரியர்கள் :

வித்துவான் :

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

த. சே. உமாபதி, M. A., L. T.

அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்

94-95, புதுத்தெரு, மண்ணடி, சென்னை—1.

காபிரைட்டு] 1952 [விலை 0-9-0

# முன்னுரை

'**வீரபாண்டியன் தமிழ் வாசகம்**' என்னும் மகுடம் புனைந்த வாசக வரிசையில் இது நான்காம் புத்தகம். இது ஆரம்பப் பாடசாலைகளுக்கு அரசியலார் வெளியிட்டுள்ள பாடத்திட்டத்தை முற்றிலும் தழுவி ஆக்கப் பெற்றுள்ளது.

இதில் பாடத்திட்டத்திற் குறிக்கப் பெற்றுள்ளபடி சுமார் 700 புதிய சொற்களைப் புகுத்தி எளிய இனிய நடையில் பாடங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. பாடங்கள் பலவகைப் பட்டவையாயினும், தமிழ் இலக்கியம், தமிழ்ப் புலவர் சம்பந்தமான பாடங்கள் சற்று அதிகமாகவே சேர்க்கப் பெற்றுள்ளன. குழந்தையுள்ளத்திற் பதியத்தக்க பாட்டுகள் பல இதன்கண் இடம் பெற்றுள்ளன. குழந்தைகள் மிக விருப்பும் சித்திரங்கட்குக் குறைவில்லை. மொழிப் பயிற்சிக்குரிய பலவகைப் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. ஆனால், இவை மாதிரிகளேயன்றி, முடிவானவையன்று.

சுருங்கக் கூற வேண்டுமாயின், இந்நூலின்கண் இடம் பெற்றுள்ள படங்களும், பாடங்களும், பாட்டுக்களும், பயிற்சிகளும் இளைஞர் உள்ளத்தில் இன்பமூட்டித் தமிழ் மொழியைக் குறைந்த கால அளவில் சிறந்த முறையில் கற்கத் துணை புரியுமென்பது ஒருதலை.

இந்நூலை எழுதுமாறு என்னை ஊக்குவித்த சென்னை **அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸாருக்கும்**, இந்நூல், அச்சாகுங்கால் மேற்பார்வை செய்து வேண்டிய திருத்தங்களைச் செய்து உதவிய மதிப்புக்குரிய நண்பர்கள் **திருவாளர், வித்துவான்–மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை** அவர்கட்கும், **திருவாளர், த. சே. உமாபதி** அவர்கட்கும் எனது உளமார்ந்த நன்றி உரியதாகும்!

அறிஞர் உலகம் இதனை அன்புடன் ஏற்று ஆதரவு நல்கும் என்பது எனது நம்பிக்கை,

சென்னை :
14–10–'52

**இராசாம்பாள் கோவிந்தராசன்.**

## பொருளடக்கம்



# 1. ஊருக்கு நல்லது சொல்வேன்

ஊருக்கு நல்லது சொல்வேன் ;—எனக்(கு)
உண்மை தெரிந்தது சொல்வேன் :
சீருக்கெல் லாம்முத லாகும்—ஒரு
தெய்வம் துணைசெய்ய வேண்டும் ! 1

சாதிக் கொடுமைகள் வேண்டா ;—அன்பு
தன்னிற் செழித்திடும் வையம்.
ஆதர வுற்றிங்கு வாழ்வோம் ;—தொழில்
ஆயிரம் மாண்புறச் செய்வோம். 2

தெய்வம் பலபல சொல்லிப்—பகைத்
தீயை வளர்ப்பவர் மூடர் ;
உய்வ தனைத்திலும் ஒன்றாய்—எங்கும்
ஓர்பொரு ளானது தெய்வம். 3

யாரும் பணிந்திடும் தெய்வம் !—பொருள்
யாவினும் நின்றிடும் தெய்வம் !
பாருக்குள் ளேதெய்வம் ஒன்று ;—இதில்
பற்பல சண்டைகள் வேண்டா. 4

அன்பென்று கொட்டு முரசே !—மக்கள்
அத்தனை பேரும் நிகராம் ;
இன்பங்கள் யாவும் பெருகும் ;—இங்கு
யாவரும் ஒன்றென்று கொண்டால். 5

உடன்பிறந் தார்களைப் போலே—இவ்
வுலகில் மனிதரெல் லாரும்.
இடம்பெரி துண்டுவை யத்தில்—இதில்
ஏதுக்குச் சண்டைகள் செய்வீர் ? 6

—பாரதியார்

# 2. தமிழ் நாட்டு முக்கிய நதிகள்

1. நாம் வசிப்பது **தமிழ் நாடு.** இதில் பல யாறுகள் பாய்கின்றன: அவை, **வடபெண்ணை, பாலாறு, தென்பெண்ணை, காவிரி, வைகை, தாமிரவர்ணி** என்பன. அவற்றுள் முக்கியமான **காவிரி, வைகை, தாமிரவர்ணி** என்னும் மூன்று யாறுகளைப் பற்றி இப்பாடத்திற்படிப்போம்.

2. **காவிரி யாறு:** இது மேற்கு மலைத்தொடர்களில் உள்ள **குடகு** நாட்டில் பிறக்கிறது. இங்கு இது பிறக்கும் இடத்துக்குத் **தலைக்காவேரி** என்பது பெயர். இங்கிருந்து இந்நதி மலை நாட்டின் மூலம் ஓடி, மைசூர்ப் பீடபூமியை அடைகிறது; மைசூரின் தென்பக்கத்திற்பாய்ந்து சென்னை இராச்சியத்தை அடைகிறது; சென்னை இராச்சியத்தில் முதலில் கோயமுத்தூர், சேலம் மாவட்டங்களின் எல்லையாய் அமைந்து ஓடுகிறது. பிறகு இந்நதி திருச்சி, தஞ்சை மாவட்டங்களிற்பாய்ந்து, அவற்றைச் செழிக்கச் செய்கிறது; முடிவில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த காவிரிப்பூம்பட்டினத்தின் அருகில் வங்காளக் குடாக் கடலில் கலக்கிறது.

3. தமிழ் நாட்டிற்பாயும் யாறுகள் எல்லாவற்றிலும் முக்கியமானது இதுவே. இதன் நீளம் ஏறத்தாழ ஐந்நூறு மைல் என்னலாம். காவிரியில் மூன்று அரங்கங்கள் உள்ளன. நீரால் சூழப்பட்ட நிலப்பகுதிக்கு **அரங்கம்** என்பது பெயர். மைசூரைச் சேர்ந்த **ஸ்ரீரங்கப்பட்டணம், முதல் அரங்கம்** ஆகும். **சிவசமுத்திரம்** என்னும் ஊரில் இருப்பது **இடையரங்கம்** என்பர். திரிச்சிராப்பள்ளியின்

அருகில் உள்ள **ஸ்ரீரங்கம், கடையரங்கம்** எனப் படும். இம்மூன்று அரங்கங்களிலும் **அரங்கநாதர்** ஆலயங்கள் உள்ளன.

4. காவிரியில் பல அணைகள் கட்டப்பட்டுள்—ளன. அவற்றுள் தலைமையானது, **மேட்டூர் அணை.** இது சேலம் மாவட்டத்தில் இருக்கிறது. இவ்வணை—யின் நீர்த்தேக்கத்தின் உதவியால் மின்சாரம் உற்—பத்தி செய்யப்படுகிறது. இது நம் தமிழ் நாட்டிற் பல இடங்களிற் பயன்படுத்தப்படுகிறது.

5. **வைகை :** இந்நதியும் மேற்குமலைத் தொடர்களின் ஒரு பகுதியாகிய **ஏலக்காய்** மலைகளில் உற்—பத்தியாகிறது. இதில் மேற்கு மலைத்தொடரில் மழை பெய்கின்ற கோடை மாதங்களில் மட்டுமே நீரோட்டம் இருக்கும்; மற்ற மாதங்களில் நீரோட்—டம் இராது. ஆயினும், இதன் கரையருகில் வாழும் மக்கள் இதிற்கால்வாய்கள் வெட்டி அவற்றில் ஊறும் நீரை உபயோகிக்கிறார்கள். இந்நதி **மதுரை, இராமநாதபுர** மாவட்டங்களிற் பாய்—கிறது.

6. மேற்கு மலைத்தொடரில் **பெரியாறு** என்—னும் நதி உற்பத்தியாகி, மேற்கு நோக்கி ஓடுகிறது. இதன் குறுக்கே அணையொன்று கட்டப்பட்டிருக்—கிறது. அதில் தேங்கும் நீரை மலைப்பாறைகளைக் குடைந்து, வாய்க்கால் ஒன்று வெட்டி, அதன் மூல—மாக வைகையில் சேரும்படி செய்திருக்கின்றனர். இப்பெரியாற்று அணையால் வைகை நதி நீரைப் பெறுகிறது. இந்நீர் மதுரை, இராமநாதபுர மாவட்டங்களில் உள்ள நிலங்களுக்குப் பாய்ச்சப் படுகிறது.

7. வைகையாற்றங்கரையிலும் பல ஊர்கள் உள்ளன. அவற்றுள் தலைசிறந்தது **மதுரை** நகரம். இந்நகரம் தமிழ் வளர்த்த பெருமை உடையது; சரித்திர நிகழ்ச்சிகளுக்கு இருப்பிடமானது.

8. **தாமிர வர்ணி**: இந்த நதியும் மேற்கு மலைத் தொடரின் ஒரு பகுதியாகிய **அகஸ்திய மலை**யில் பிறக்கிறது; திருநெல்வேலி மாவட்டத்தின் மூலம் பாய்கிறது; **மன்னார் வளைகுடா**வில் கலக்கிறது.

9. தாமிரவர்ணி யாறு பல வகைகளில் சிறப்புள்ளதாய் விளங்குகின்றது. **அம்பா சமுத்திரம்** தாலூக்காவில் இதில் ஒரு நீர் வீழ்ச்சி ஏற்படுகிறது. அதற்குப் **பாபநாச நீர் வீழ்ச்சி** என்பது பெயர். அன்றியும், இதன் துணையாருகிய சிற்றாற்றில், **குற்றால மலை**யில், ஒரு நீர் வீழ்ச்சி ஏற்படுகின்றது. இதுவே **குற்றால நீர் வீழ்ச்சி** என்று மக்களால் சிறப்பிக்கப்படுகிறது.



10. தாமிர வர்ணியின் பெருமைக்கு வேருெரு காரணமும் உண்டு. இந்நதியில் பன்னிரண்டு அணைகள் கட்டி, நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி உண்டாக்கப்படுகிறது. அன்றியும், இதன் இருகரைகளிலும் பல முக்கியப் பட்டணங்கள் உள்ளன. அவற்றுள்

**பாபநாசம், திருநெல்வேலி, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி** என்பன குறிப்பிடத் தக்கவை.

11. தமிழ் நாட்டின் பெருமைக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றுள் முதன்மையான காரணம், இந்நாட்டிற்பாயும் சிறந்த நதிகளேயாகும். இந்நதிகள் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதியைத் தருவதோடு, மின்சார உற்பத்திக்கும் துணை புரிகின்றன. இந்நதிகளை நேரிற்கண்டு, இவற்றைப் பற்றிய எல்லா விவரங்களையும் அறிய வேண்டுவது தமிழ் மக்கள் கடமையாகும்.

### பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. தமிழ் நாட்டிற்பாயும் முக்கிய நதிகள் யாவை ?

ஆ. காவிரி எங்கே பிறக்கிறது ?

இ. அதில் எத்தனை அரங்கங்கள் உள்ளன ? அவை எங்குள்ளன ?

ஈ. காவிரியில் கட்டப்பட்டுள்ள பெரிய அணை எது ?

உ. வைகை நதியில் அதிக நீர் வருவதற்கு என்ன ஏற்பாடு செய்திருக்கின்றனர் ?

ஊ. தாமிரவர்ணியின் பெருமைக்குக் காரணங்கள் யாவை ?

**2. எதிர்ச்சொற்களைப் பொருத்து :—**

அகம்—அகலம்—அடைப்பு—அலர்ந்தது—
ஆக்கல்—ஆரம்பம்—இன்பம்—இலாபம்

திறப்பு—குவிந்தது—புறம்—குறுக்கம்—
முடிவு—துன்பம்—அழிதல்—நஷ்டம்

3 இதைத் தெரிந்துகொள் :—

ரகர—றகர வேறுபாடு

அரம் என்பது இரும்புக் கருவி.
அறம் என்பது தருமம்.

அரி என்பது திருமாலைக் குறிக்கும்.
அறி என்பதற்குத் 'தெரிந்துகொள்' என்பது பொருள்.

அருகு என்பது 'சமீபம்' என்னும் பொருள் உள்ளது.
அறுகு என்பது 'அறுகம்புல்'.

குறிப்பு :— ரகர றகர வேறுபாட்டைக் கவனி.

4. மேல் வந்துள்ள ஒவ்வொரு சொல்லையும் உனது சொந்த வாக்கியத்தில் அமைத்தெழுது.

5. கீழ் வரும் இரண்டிரண்டு வாக்கியங்களை ஒவ்வொரு வாக்கியமாக எழுது :—

அ. 1. தமிழ் நாட்டில் பல யாறுகள் பாய்கின்றன.
2. அவற்றுள் முக்கியமானது காவிரி.

ஆ. 1. காவிரி என்பது ஒரு யாறு.
2. அது தலைக்காவேரியில் பிறக்கிறது.

இ. 1. காவிரியில் உள்ள அரங்கங்கள் மூன்று.
2. அவற்றுள் முக்கியமானது திருவரங்கம்.

ஈ. 1. மேற்கு நோக்கி ஓடுவது பெரியாறு.
2. அது கிழக்கே திருப்பப்படுகிறது.



# 3. நினைப்பும் சொல்லும்

1. வழுதாவூரில் குதிரை வீரன் ஒருவன் இருந்தான். அவனது குதிரை மிக்க நுட்பப்புத்தி உடையது; அவன், 'ஹா!' என்றால் மிக விரைந்து ஓடும். எவ்வளவு வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் பொழுதும், 'நில்' என்றால், உடனே நின்றுவிடும்.

2. ஒரு நாள் அவ்வீரன் அக்குதிரையின்மீது ஏறிச் செஞ்சியை நோக்கிச் சென்றுகொண்டிருந்தான். வெயில் மிகக் கடுமையாய் இருந்தது. அதோடு வறட்சி மிக்க கடுங்காற்றும் வீசிக்கொண்டிருந்தது. நெடுந்தூரம் பிரயாணம் செய்தபடியால், வீரனுக்குத் தாகம் அதிகரித்தது. தான் சென்ற வழியில் எங்கும் நீர் கிடையாமையால், அவன் அடைந்த துன்பத்துக்கு அளவில்லை.

3. சாலையின் இரு பக்கங்களிலும், 'நீர் கிடைக்குமா?' என்ற ஏக்கத்துடன் கூர்ந்து பார்த்துக் கொண்டே சென்றான் வீரன்; அப்போது சற்றுத் தூரத்தில் ஒரு நாவல் மரம் இருந்ததைக் கண்டான்; அருகிற்செல்லச் செல்ல, அதன் கிளைகளில் நிரம்பப் பழங்கள் இருக்கக் கண்டான். அவனுக்கு உண்டான ஆனந்தத்துக்கு அளவே இல்லை. ஆனால்,

மரத்தின்மீது ஏறமுடியாமல் அதைச் சூழ்ந்து முட்புதர்கள் இருந்தன.

4. நாவற்பழங்களைப் பறித்துத் தின்று தனது தாகத்தைத் தணித்துக்கொள்ள நிச்சயித்தான் அவ்வீரன்; 'மரத்தின்மீது எவ்வாறு ஏறுவது!' என்று சற்று யோசித்தான். உடனே அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது: புதர்களைக் கடந்து மரத்தின்மீது ஏறாமலே, தனது குதிரையின்மீது நின்றபடியே பழங்களைப் பறித்துத் தின்ன வேண்டும் என்பதே அந்த யோசனை.

5. வீரன் தனது நுண்ணறிவு மிக்க குதிரையை மெல்ல மரத்தின்கீழ்ச் செலுத்தினான். அது அவன் விருப்பப்படியே முட்புதரின் இடையே சென்று நின்றது. உடனே வீரன் குதிரையின் மீது எழுந்து நின்றான். நாவல் மரத்தின் தாழ்ந்த கிளையொன்று அவன் கைக்கு எட்டியது. அதிருஷ்டவசமாக அக்கிளையில் எண்ணற்ற பழங்கள் இருந்தன. அவற்றைப் பறித்து மனமார அவன் தின்றான். அவன் தாகமும் தணிந்தது; பசியும் நீங்கியது.

6. பிறகு வீரன் தன் தாகம் தணிவதற்குத் துணை புரிந்த தனது குதிரையின் அரிய செயலை நினைந்து மகிழ்ந்தான். அப்போது அவன் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றியது: அச்சமயத்தில் யாராவது வழிப்போக்கன் தற்செயலாக 'ஹா' என்று சொல்ல நேர்ந்தால், தன் கதி என்ன ஆகும் என்று எண்ணினான். அவன் அப்போது மிக்க மகிழ்ச்சியுடன் இருந்தான்; ஆதலால், தனது மனத்-

தில் தோன்றிய எண்ணத்தைத் தன்னை அறியாமலே வாய் விட்டுக் கூறிவிட்டான்.

7. வீரனது வாயிலிருந்து 'ஹர்' என்னும் சத்தம் கேட்டதோ இல்லையோ, குதிரை பாய்ந்து ஓடத் தொடங்கியது. அதன் முதுகில் நின்றுகொண்டிருந்த வீரன் முட்புதரில் விழுந்தான். அவன் உடல் முழுதும் முட்கள் தைத்துவிட்டன. வீரனுக்கு நோய் தாங்க முடியவில்லை. பாவம்! அவன் என்ன செய்வான்! அப்போது அவன், '**மனத்துள் தோன்றும் எண்ணங்கள் எல்லாவற்றையும் வாய்விட்டுக் கூறுவது மதியீனம்,**' என்னும் உண்மையை அறிந்தான்.



### அருஞ்சொற்பொருள்

நுட்பப் புத்தி–கூரியபுத்தி, விரைந்து–வேகமாய், கடுமை–அதிகம், கடுங்காற்று –பெருங்காற்று, துன்பம்–கஷ்டம், தணிக்க–குறைக்க, துணைபுரிய–உதவி செய்ய, கதி–நிலை, மதியீனம்–புத்தி இல்லாமை.

### பயிற்சி :

1. **விடை எழுது :—**

அ. வீரன் எங்கிருந்து எங்குச் சென்றான் ?

ஆ. வழியில் அவன் எதனால் துன்புற்றான் ?

இ. நாவல் மரத்தில் ஏற முடியாமல் அவனைத் தடுத்தது எது ?

ஈ. வீரன் நாவற்பழங்களை எவ்வாறு பறித்துத் தின்றான் ?

உ. வீரன் ஏன் புதரில் விழுந்தான்? அதனால் அவன் அறிந்த நீதி யாது?

2. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது :—

நுட்பப் புத்தி, விரைந்து, ஏக்கம், ஆனந்தம், விருப்பம், மனமார, மகிழ்ந்தான், எண்ணம், மதியீனம்

3. இதைத் தெரிந்துகொள் :—

ரகர–றகர வேறுபாடு :

அலரி என்பது ஒரு பூ.
அலறி என்பது கதறி அல்லது அழுது என்னும் பொருள் பெறும்.

ஆர என்பது நிரம்ப என்னும் பொருள் பெறும்.—வயிறு ஆர உண்டான்.
ஆற என்பது குளிர என்னும் பொருள் பெறும்.

## இலக்கணம்

**எழுத்து :**

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ — இப் பன்னிரண்டும் உயிர் எழுத்துக்கள்.

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்— இப் பதினெட்டும் மெய் எழுத்துக்கள்.

| | | |
|---|---|---|
| க் + அ — க | ம் + அ — ம | இவை உயிரும் மெய்யும் கூடிப் பிறந்தன. ஆதலால் **உயிர்மெய் எழுத்து** எனப்படும். மெய் எழுத்துப் பதினெட்டோடும் உயிர் பன்னிரண்டும் தனித் தனி கூடினால், 18 × 12 = 216 உயிர்மெய் உண்டாகும். |
| ங் + அ — ங | ய் + அ — ய | |
| ச் + அ — ச | ர் + அ — ர | |
| ஞ் + அ — ஞ | ல் + அ — ல | |
| ட் + அ — ட | வ் + அ — வ | |
| ண் + அ — ண | ழ் + அ — ழ | |
| த் + அ — த | ள் + அ — ள | |
| ந் + அ — ந | ற் + அ — ற | |
| ப் + அ — ப | ன் + அ — ன | |

—இஃது **ஆய்த** எழுத்து.



## 4. 'முற்பகல் செய்யின், பிற்பகல் விளையும்.'

1. இப்பாடத்தின் தலைப்பு, நமது நாட்டில் நெடுங்காலமாக வழங்கி வரும் ஒரு முதுமொழி. 'முதுமொழி' என்பதும், 'பழமொழி' என்பதும் ஒரே பொருளை உடையவை. இப்பழமொழியின் பொருள் யாது?

2. 'ஒருவன் ஒரு காரியத்தைச் செய்தால், அதன் பயனை அவன் விரைவில் அனுபவிப்பான்,' என்பதே இம் முதுமொழியின் பொருள். செய்யும் காரியம் நல்லதாயின், பயன் நல்லதாய் இருக்கும். காரியம் தீயதாயின், பயனும் தீயதாகவே இருக்கும். நல்ல காரியத்தின் பயனைக் காட்டிலும் தீய காரியத்தின் பயன் விரைவில் கிட்டும். இந்த உண்மையை விளக்கும் கதை ஒன்றைப் படிக்கலாம்:

3. நமது நாட்டின் மேற்கு எல்லையாய் இருப்பது **அரபிக்கடல்**. அக்கடலின் இடையில் மிகச்

சிறிய தீவுகள் பல இருக்கின்றன. அவற்றுள் சில, கடல் மட்டத்தில் உள்ளன. ஆதலால், கடல் கொந்தளிப்பாய் இருக்கும்போது அவை நீரில் மறைந்து விடும். அத்தருணத்தில் மரக்கலங்களைச் செலுத்துபவர் அத்தீவுகளை அறிதல் இயலாது. ஆதலால், மரக்கலங்கள் அத்தீவுகளின்மீது தாக்கி உடைபடும்.

4. நெடுங்காலத்துக்கு முன் அரபிக்கடலில் கடற்கொள்ளைக் கூட்டம் ஒன்று இருந்தது. அக்கூட்டத்தின் தலைவன் பெயர் **அப்துல்லா**. கடற்கொந்தளிப்பால் தீவுகளின்மீது மோதி உடையும் மரக்கலங்களைத் தன் கூட்டத்தவரோடு சூழ்ந்து கொள்ளையடிப்பது அப்துல்லாவின் வழக்கம். அதனால், நமது நாட்டிலிருந்து மேல் நாடுகளுக்கு வாணிகம் செய்யச் சென்ற இந்திய வணிகர் அடிக்கடி துன்புற நேர்ந்தது. அவ்வாறே மேல் நாடுகளிலிருந்து நமது நாட்டுக்கு வாணிகம் செய்ய வந்த ஐரோப்பிய வணிகரும் துன்பமடைந்தனர்.

5. இந்தத் தொல்லையைப் பற்றி அடிக்கடி கேள்விப்பட்டார் சேர மன்னர்; மரக்கலங்களையும், வணிகரையும் காப்பாற்ற ஒரு வழி செய்தார் : மரக்கலங்கள் அடிக்கடி தாக்கிய தீவைக் கண்டறிந்தார்; அதில் ஒரு மிதவையை நாட்டினார்; அம்மிதவையில் ஒரு பெரிய மணியைக் கட்டி வைத்தார். கடல் கொந்தளிக்கும் போது அலைகள் வேகமாக வீசும் அல்லவா ? அலைகளின் வேகத்தால் மிதவை அசையும். மிதவை அசைந்தால், அதிற் கட்டப்பட்டிருக்கும் மணியும் அசைந்து, ஒலி உண்டாகும். அந்த ஒலியைக் கேட்டு, மாலுமிகள், அத்தீவின்மீது மோதாதபடி தங்கள் மரக்கலங்களைத் திருப்பிச்

செல்வார்கள். இதனால், அத்தீவு **மணித்தீவு** என்று வழங்கலாயிற்று.

6. அரசரது நற்செயலால் மரக்கலங்கள் உடைபடாமல் காக்கப்பட்டன. மாலுமிகள் அரசரை வாயார வாழ்த்தி வந்தார்கள். ஆனால், அரசர் செயல் அப்துல்லாவுக்கு நஷ்டத்தை உண்டாக்கியது; அரசர் கட்டுவித்த மணி, கடற்கொள்ளைக் காரனுக்கு இடையூறாய் இருந்தது.

7. ஒரு நாள் அப்துல்லா தனது மரக்கலத்தை மணித்தீவை நோக்கிச் செலுத்தினான்; தீவுக்குச் சற்றுத் தூரத்தில் நிறுத்திவிட்டு, ஒரு படகில் ஏறி மணியை அடைந்தான்; தனது உடை வாளால் அது கட்டப்பட்டிருந்த கயிற்றை வெட்டி மணியைக் கடலில் எறிந்துவிட்டுத் திரும்பினான்.

8. சில மாதங்கள் கழிந்தன; தனது கொள்ளைத்தொழில் நிமித்தம் தென்கடல் சென்றவன், மீண்டும் தனது இருப்பிடம் நோக்கி வந்துகொண்டிருந்தான். சூரியன் மறைந்தது; எங்கும் இருள் சூழ்ந்தது. திடீரென்று பெருங்காற்று வீசத் தொடங்கிற்று. கடல் கொந்தளிக்கத் தொடங்கியது. திக்குத் தெரியாமல் செலுத்தப்பட்ட அப்துல்லாவின் மரக்கலம், மணித்தீவின்மீது மோதியது; இடி இடித்தாற்போலச் சத்தம் செய்தது. கொள்ளைக்காரரும் அவர்கள் தலைவனும் அப்போதுதான் தங்கள் தீய செயலின் பயனை உணர்ந்தார்கள். ஒருவன், "அந்த மணி அப்படியே இருந்திருந்தால் நமக்கு இந்த ஆபத்து வந்திராதே!" என்றான். அது கேட்ட அப்துல்லா, தனக்கு இறுதிக்காலம் நெருங்கி விட்டதறிந்து, "ஆம்! '**முற்பகல் செய்யின், பிற்**

பகல் விளையும்,' என்னும் முதியோர் வாக்கு உண்மையாயிற்று,'' என்று கூறி வருந்தினன். வருந்திப் பயன் என்ன ?



அருஞ்சொற்பொருள்:

தலைப்பு-மகுடம், பொருள்-அருத்தம், காரியம்-செயல், பயன்-பலன், உபயோகம்; கிட்டாவிட்டால்-கிடையா விட்டால், விளக்கும்-அறிவிக்கும், வெளிப்படுத்தும்; தீவு-எல்லாப்பக்கங்களும் நீரால் சூழப்பட்ட நிலம், கொந்தளிப்பு-அலை வீசி மேலே எழுதல், தருணம்-சமயம்.

பயிற்சி:

1. **விடை எழுது :—**

அ. மரக்கலங்களுக்கு அரபிக்கடலில் அடிக்கடி என்ன நேர்ந்து வந்தது ?

ஆ. சேர மன்னர் கடல் வணிகருக்குச் செய்த நன்மை யாது ?

இ. சேர மன்னர் செய்த நற்காரியத்தால் அப்துல்லாவுக்கு ஏற்பட்ட நஷ்டம் யாது ?

ஈ. அப்துல்லா செய்த தீய செயல் யாது ?

உ. அப்துல்லாவின் தீய செயலால் அவனுக்கு ஏற்பட்ட துன்பம் என்ன ?

2. **எதிர்ச்சொற்களைப் பொருத்தி எழுது :—**

உறவு-எரிதல்-ஏறினன்-ஓங்கியது-கட்டினன்-கவனம்-கற்றார்-காப்பாற்றினர்-காலை-குணம்.

மறதி—கல்லாதவர்-கைவிட்டார்- மாலை - குற்றம், அவிழ்த்தான்-இறங்கினன்—பகை-அவிதல்-ஒடுங்கியது.

3. இதைத் தெரிந்துகொள் :—

ரகர – றகர வேறுபாடு :

இரந்தான் என்பது 'பிச்சை எடுத்தான்' என்று பொருள்படும்.

இறந்தான் என்பது 'மாண்டான்' என்று பொருள்படும்.

இரங்கு என்பது 'பரிதாபப்படு' என்று பொருள்படும்.

இறங்கு என்பது 'கீழே வா' என்று பொருள்படும்.

இரு என்பது 'உட்காரு,' 'இரண்டு,என்னும் பொருள் தரும்.

இறு என்பது 'வடிகட்டு' என்னும் பொருள் தரும்.

4 சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுது :—

நெடுங்காலம், அனுபவி, கிட்டாது, எல்லை, மரக்கலம், தருணம், தலைவன், வாணிகம், தொல்லை.

5. தகுந்த சொல்லால் கோட்டை நிரப்பு :

அ. இரும்புக் கடையில் ஓர் ——— வாங்கினேன்.
(அறம், அரம்)

ஆ. தமிழ் நாடு ——— செய்வதிற் பெயர் பெற்றது.
(அறம், அரம்)

இ. ——— பொருள்களை ——— முயன்றான்.
(அறிய, அரிய)

ஈ. மதில் ——— ——— முளைத்தது.
(அறுகு, அருகே)

உ. ——— தைக் காட்டிலும் ——— தே மேலானது.
(இறப்ப, இரப்ப)

ஊ. என் மீது மனம் ——— கீழே ——— வா.
(இறங்கி, இரங்கி)



## 5. 'கொக்கென்று நினைத்தீரோ கொங்கணவீர்!'

1. நமது தமிழ்மொழியில் பல்லாயிரம் நூல்கள் உண்டு. அவற்றுள் மிகச் சிறந்தவை சில. அச் சில நூல்களுள் முதன்மையானது **திருக்குறள்**. திருக்குறள், மனிதர் எவ்வாறு வாழவேண்டும் என்பதைத் தெளிவாகக் கூறுகிறது.

2. திருக்குறளை இயற்றியவர் **திருவள்ளுவர்**. இவர் பிறப்பு வளர்ப்புக்களைப் பற்றிய உண்மைகள் தெரியவில்லை. இவர் சென்னையில் உள்ள **மயிலாப்பூரிலும்**, சென்னைக்குத் தெற்கே நெடுந்தொலைவிலுள்ள **மதுரை மாநகரத்திலும்** வாழ்ந்தார் என்பது மட்டும் தெரிகிறது. மயிலாப்பூரில் இவருக்கு ஒரு கோவில் கட்டப்பட்டிருக்கிறது. இவர் உழவுத் தொழிலையும், நெசவுத்தொழிலையும் சிறந்த தொழில்களாக மதித்தார்; ஆதலால், இவர் நெசவுத்தொழிலைச் செய்து வாழ்ந்து வந்தார்.

3. திருவள்ளுவரின் மனைவியார் பெயர் **வாசுகியம்மையார்.** அவ்வம்மையார் ஒழுக்கம் நிறைந்தவர்; கணவரைக் கடவுளாக மதித்தவர்; கணவர் சொல்லைத் தட்டாதவர். அவ்வம்மையாரைப் பற்றிப் பல செய்திகள் வழங்குகின்றன. அவற்றுள் ஒன்று படித்து மகிழத்தக்கது:

4. திருவள்ளுவர் காலத்தில் தவசியார் ஒருவர் இருந்தார். அவர் பெயர் **கொங்கணவர்.** அவர் காட்டில் தங்கித் தவம் செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் வானத்திற்பறந்து சென்ற ஒரு கொக்கு அவர்மீது எச்சமிட்டது. அது கண்ட தவசியார் கோபம்கொண்டு, அக்கொக்கை உற்று நோக்கினர். அவரது கோபத் தீயால் அக்கொக்கு எரிந்து சாம்பராயிற்று. அது கண்ட கொங்கணவர், தாம் செய்த தவத்தின் பயனைப் பெற்றுவிட்டதாக எண்ணினர்; காட்டை விட்டு நாட்டிற்கு வந்தார்.

5. கொங்கணவர் தவசியாராதலால், பிச்சை எடுத்தே சாப்பிட்டு வந்தார். ஒரு நாள் அவர் திருவள்ளுவர் வீட்டுக்கு வந்து பிச்சை கேட்டார். அப்போது வாசுகியம்மையார் தம் கணவருக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தார். ஆதலால், பிச்சை கொண்டு வர நேரமாயிற்று. தமது பெருமையை அறியாமல், தம்மை நெடுநேரம் காக்க வைத்ததற்காகக் கொங்கணவர் அம்மையார்மீது கோபங்கொண்டார்; கொக்கை எரித்தது போலத் தமது கோபத் தீயால் அம்மையாரையும் எரிக்க எண்ணினர்; காலந்தாழ்த்துப் பிச்சை கொண்டு வந்த அம்மையாரைக் கோபம் நிறைந்த கண்களால் உற்று நோக்கினர்.

6. தமது பெருமையை உணராது தம்மை ஏறிட்டுப் பார்த்தவர் யார் என்பதை அம்மையார் தமது கற்பின் ஆற்றலால் அறிந்தார். தவசியாரின் மடமையைக் கண்டு அவ்வம்மையாருக்குச் சிரிப்பு வந்தது. அவர் சிரித்துக்கொண்டே, தவசியாரை நோக்கி, '**கொக்கென்று நினைத்தீரோ கொங்கண-வீர்!**' என்று கேட்டார்.

7. வாசுகியம்மையாரின் சொற்களைக் கேட்ட கொங்கணவர் நடுங்கிவிட்டார். காட்டில் நிகழ்ந்த-தும், தம்மைத் தவிரப் பிறர் எவரும் அறியாதது-மான நிகழ்ச்சி அவ்வம்மையாருக்கு எப்படித் தெரிந்தது என்று அவர் சிந்தித்தார்; அதற்குக் காரணம், வாசுகியம்மையாரின் கற்பே என்பதை உணர்ந்தார். உடனே அவர் அம்மையாரை வணங்கி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். வாசுகி-யம்மையாரின் கற்பை விளக்கும் செய்திகள் எத்-தனையோ உண்டு. அவற்றை மேல் வகுப்புக்களில் அறியலாம்.

**அருஞ்சொற்பொருள் :**

மொழி–பாஷை, பல்லாயிரம்–பல ஆயிரம், தெளிவாக–விளக்கமாக, இயற்றியவர்–செய்தவர், மதித்தார்–எண்ணினார், ஒழுக்கம்–நல்ல நடத்தை, தட்டாதவர்–மறுத்துக் கூறுதவர், செய்திகள்–சமாசாரங்கள், வானம்–ஆகாயம், தவசி–ஊண் உறக்கம் இல்லாமல் கடவுளைத் தியானிப்பவர், பணிவிடை–வேலை, குற்றேவல்; ஆற்றல்–திறமை, மடமை–புத்தியில்லாமை, நடுங்கினர்–பயந்தார், நிகழ்ந்தது–நடைபெற்றது, நிகழ்ச்சி–சம்பவம், சிந்தித்தார்-யோசித்தார், மன்னிப்பு-பொறுத்துக்கொள்ளல்.

## பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. திருவள்ளுவர் இயற்றிய நூல் எது ?

ஆ. திருவள்ளுவர் எங்கு வாழ்ந்தார் ?

இ. திருவள்ளுவரின் மனைவியார் பெயர் யாது ? அவர் எதிற்சிறந்தவர் ?

ஈ. கொங்கணவர் யார் ? அவர் திருவள்ளுவர் வீட்டுக்கு ஏன் வந்தார் ?

உ. 'கொக்கென்று நினைத்தீரோ கொங்கணவீர் !' என்று வாசுகியம்மையார் ஏன் கேட்டார் ?

**2. எதிர்ப்பதங்களை இணைத்தெழுது :—**

குணம்—குறைவு—கூடுதல்—கொடுக்கல்—சுகம்—
சுருங்கல்—செங்கோல்—செல்வம்—சேர்த்தல்—சேர்தல்

துக்கம்—கொடுங்கோல்—பிரித்தல்—நீங்கல்—விரிதல்
வறுமை—பிரிதல்—நிறைவு—குற்றம்—வாங்கல்

**3. இதைத் தெரிந்துகொள் :—**

ரகர—றகர வேறுபாடு :

இரை என்பது 'தீனி' என்னும் பொருள் உள்ளது.
இறை என்பது 'கடவுள்', 'அரசன்', 'கப்பம்' என்னும் பொருள் பெறும்.

உரவு என்பது 'வலிமை' என்னும் பொருள் உள்ளது.
உறவு என்பது 'சுற்றம்' என்னும் பொருள் பெறும்.

உரை என்பது 'சொல்', 'அர்த்தம்' என்னும் பொருள் பெறும்.
உறை என்பது 'மூடி' (தலையணை உறை) என்னும் பொருளில் வரும்.

# 6. கதைப் படம்

குறிப்பு :—படத்தைப் பார்த்துக் கதை சொல்லச் செய்தல் :





## 7. மாமல்லபுரம்

1. பண்டைக் காலத்தில் நமது தமிழ் நாடு மூன்று நாடுகளாய்ப் பிரிந்திருந்தது. அவை **சேர நாடு, சோழ நாடு, பாண்டி நாடு** எனப் பெயர் பெற்றன. ஆயிரத்து அறுநூறு ஆண்டுகளுக்கு முன், சோழ நாட்டைப் **பல்லவர்** என வழங்கிய ஓர் அரச வமிசத்தினர் கைப்பற்றினர். எனவே, சோழ நாடு **பல்லவ நாடு** ஆயிற்று. **காஞ்சீபுரம்** அதன் தலை நகரமாயும், **மாமல்லபுரம்** அதன் **துறை** முகப்பட்டினமாயும் விளங்கின.

2. பல்லவ மன்னர்களுள் **மகேந்திரவர்மரும்,** அவர் மைந்தர் **நரசிம்மவர்மரும்** சிறந்து விளங்கினர். அவர்கள் சிறந்த வீரர்கள். நரசிம்மவர்மர் பல போர்கள் புரிந்து வெற்றி பெற்றார். ஆதலால், அவருக்கு **மாமல்லர்** என்ற பட்டப் பெயர் வழங்கி வந்தது. அவர் இராச்சியத்தின் **துறைமுகப்பட்டி-னம்,** அவர் பெயரால் '**மாமல்லபுரம்**' என்று வழங்-

கலாயிற்று. அதற்கு முன் அதற்குத் '**தலசயனம்**' என்ற பெயர் வழங்கி வந்தது. மாமல்லபுரம் இக் காலத்தில் **மகாபலிபுரம்** என வழங்குகிறது. **கடல் மல்லை** என்பதும் முற்காலத்தில் அதற்கு வழங்கி வந்த மற்றொரு பெயர்.

3. மாமல்லபுரம், செங்கற்பட்டு ஜில்லாவில் சென்னைக்குத் தெற்கேமுப்பத்தைந்து மைல் தொலை-வில், கடற்கரையில் இருக்கிறது. இக்காலத்தில் அது சுமார் நூறு வீடுகளை உடைய ஒரு சிற்றூராய் விளங்குகிறது. பண்டைக் காலத்தில் அது மிகப் பெரிய துறைமுகப் பட்டினமாய் விளங்கியது. அதன் துறைமுகத்தில் பல நாட்டு மரக்கலங்கள் வாணிகத்துக்காக வந்து தங்கும். அக்கலங்களுக்கு வழி காட்ட ஒரு கலங்கரை விளக்கமும் அங்கு இருந்-தது.

4. மாமல்லபுரம் சிறந்த சிற்பங்களுக்கு இருப்-பிடமாய் விளங்குகிறது. கருங்கல், மரம், உலோகம் முதலியவற்றில் செதுக்கும் அழகிய உருவமே சிற்பமாகும். மகேந்திரவர்மரும் நரசிம்மவர்மரும் தம் காலத்தில் மாமல்லபுரத்தில் சிறந்த சிற்பங்-களைச் செதுக்குவித்தார்கள். அவை மிகுந்த அழ-குள்ளவை. அவை இன்னும் அழகு குன்றாமல் காணப்படுகின்றன. அவற்றைக் காணத் திரள் திரளாக மக்கள் அங்குப் போகின்றார்கள்.

5. மாமல்லபுரத்தில் உள்ள சிற்பங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்: பாறைகளின் மீது செதுக்கப்பட்ட சிற்பங்கள் ஒரு வகை; பாறைகளைக் குடைந்து செய்யப்பட்ட மண்டபங்கள் மற்றொரு வகை; ஒரே பாறையைக் குடைந்து தேர் போலச்

செதுக்கப்பெற்றுள்ள கோவில்கள் ஒரு வகை. இவை அன்றிக் கடற்கரையிற்காணப்படும் கோவில் ஒரு தனி வகை.

6. பாறைச் சித்திரங்களுள் மிகச் சிறந்தது **அருச்சுனன் தவம்** செய்வது போலவும், அத்தவத்தைக் காணத் தேவர்கள் வருவது போலவும் செதுக்கப்பட்டுள்ளதேயாகும். இதிற்காணப்படும் யானை,



குரங்கு, மான் முதலிய மிருகங்களின் உருவங்கள், கண்டு களிக்கத்தக்கவை. இப்பாறையிற்காணப்படும் மனித உருவங்களும் மிக அழகாய் அமைந்துள்ளன.

7. அடுத்தபடி பாறைகளைக் குடைந்தே மண்டபங்களைச் செய்துள்ளனர். இந்த மண்டபங்களில் கண்ணைக் கவரும் சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் **மகிஷாசுரன்** என்னும் அசுரனுடன் இறைவி போர் புரிவதுபோல அமைந்துள்ள **மகிஷாசுரமர்த்தனி** சிற்பமே முதன்மையானது. திருமால் பன்றியவதாரம் எடுத்துப் பூமியைத் தம்முடைய

கொம்புகளில் தாங்கி நிற்பது போன்ற **வராக மூர்த்தி** சிற்பமும் கண்டு களிக்கத்தக்கது. இத்தகைய மண்டபங்கள் அங்கு எத்தனையோ உண்டு.

8. மாமல்லபுரத்துக்குத் தெற்கே முக்கால் மைல் தொலைவில் '**பாண்டவ ரதங்கள்**' என்னும் கோவில்கள் உள்ளன. பஞ்சபாண்டவருக்கும் இந்த இரதங்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இரதங்கள் ஐந்து இருப்பதால், இப்பெயர் வழங்கி வருகிறது. இந்த இரதங்களுள் ஒவ்வொன்றும் ஒரே பாறையில் குடையப்பட்டது. இவற்றுள்



மிகப் பெரியதான **தருமர் இரதம்**, இரண்டு அடுக்கு மாடிகளை உடையது. இதிற் புராண சம்பந்தமான பல உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அவை எல்லாம் இப்போதுதான் செதுக்கப்பட்டவை போல மிக்க அழகுடையனவாய்க் காணப்படுகின்றன. இந்த இரதங்களின் அருகில் நின்றிருப்பது போன்ற ஒரு யானையின் உருவமும், படுத்திருப்பது போன்ற ஒரு காளை மாட்டின் உருவமும் உயிர் உள்ளவை போலக் காணப்படுகின்றன.

9. கடற்கரையில் ஒரு கோவில் இருக்கிறது. அதன் கீழ்ப்புறத்தில் இலிங்கம் இருக்கிறது. மேற்புறத்தில் படுத்த கோலத்தில் திருமால் உருவம் இருக்கிறது. மாமல்லபுரத்துச் சிற்பங்களின் அழகை எழுதி விளக்குதல் இயலாது; நேரிற் சென்று கண்டே அவற்றின் பெருமையை அறிய வேண்டும்.

அருஞ்சொற் பொருள் :

பண்டைக் காலம்-பழைய காலம், வமிசம்-பரம்பரை, துறைமுகம்—கப்பல் துறை, போர்-சண்டை, மரக்கலம்-பாய் மரக் கப்பல், கலங்கரை விளக்கம்-கப்பல்களுக்குக் கரையைக் காட்டக் கட்டப்படும் விளக்கு ஸ்தம்பம், குன்றுமல்—குறையாமல், திரள் திரளாக-கூட்டம் கூட்டமாக, களிக்க—மகிழ, கண்ணைக்கவரும் – பார்வையை வசப்படுத்தும், புராணம்—பழங்கதை, இயலாது—முடியாது.

பயிற்சி :

1. விடை எழுது :—

அ. பல்லவ மன்னருள் சிறந்தவர் யாவர்?
ஆ. மாமல்லபுரத்தின் பண்டைப் பெயர் யாது?
இ. மாமல்லபுரத்துக்கு அப்பெயர் வரக் காரணம் என்ன?
ஈ. மாமல்லபுரம் எங்கே இருக்கிறது?
உ. மாமல்லபுரத்துக்கு வழங்கிய வேறு பெயர்கள் யாவை?
ஊ. மாமல்லபுரத்துச் சிற்பங்களை எத்தனை வகையாகப் பிரிக்கலாம்? அவை எவை?
எ. பாறைச் சித்திரங்களுள் சிறந்தது எது?
ஏ. மண்டபங்களிற் சிறந்தவை எவை?
ஐ. பாண்டவ ரதங்களைப் பற்றி ஒரு குறிப்பு வரைக.

2. எதிர்ப்பதங்களை இணைத்தெழுது :—

சௌக்கியம்—தன்னலம் – தாமதம் – தூக்கம் – தூரம்-தோல்வி—தோற்பு—தோற்றம்—நல்லவர்.

சமீபம்–வெற்றி – கெலிப்பு – மறைவு – தீயவர்–விழிப்பு – துரிதம்–பிறர்நலம்– அசௌக்கியம்.

**3. இதைத் தெரிந்துகொள் :—**

**ரகர–றகர வேற்றுமை:**

எரி என்பது 'தீ' 'நெருப்பு' என்னும் பொருள் உள்ளது.
எறி என்பது 'வீசு' என்னும் பொருள் உடையது. உதாரணம்–பந்தை **எறிந்தான்.**

ஏரி என்பது பெருங்குளம்.
ஏறி என்பது 'அதிகரித்து', 'ஒன்றின்மீது ஏறி' என்னும் பொருளில் வரும். உதாரணம்–குதிரை **ஏறினன்.**

கரி என்பது 'அடுப்புக் கரி', 'யானை' என்னும் பொருள் உடையது.
கறி என்பது 'காய்கறி,' 'மாமிசம்' என்னும் பொருள் உடையது.

**4. மேலே தரப்பட்டுள்ள ஆறு சொற்களையும் உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.**

**இலக்கணம் :**

**சொல்:**

**இவற்றைப் படி :—**

**ர ம் ம** –மூன்றெழுத்துக்கள் வரிசையாய் உள்ளன. ஆனல், **இவை பொருள் தரவில்லை.**
**ம ர ம்** - மேலேயுள்ள மூன்றெழுத்துக்களே இங்குத் தொடர்ந்து நின்று பொருள் தருகின்றன.

**மனப்பாடம் செய் :**

**எழுத்துத் தனித்தோ, தொடர்ந்தோ நின்று, பொருள்தரின் சொல்லாம்.**

# 8. காங்கோக் காட்டுக் குள்ளர்கள்

1. நாம் வசிக்கும் உலகம், சில பெரிய நிலப் பாகங்களாயும், நீர்ப் பிரிவுகளாயும் அமைந்திருக்கிறது. நிலப்பாகங்களுக்குக் **கண்டங்கள்** என்பது பெயர். நீர்ப் பிரிவுகளுக்குச் **சமுத்திரங்கள்** என்பது பெயர்.

2. ஆசியாக் கண்டத்தின் தென்பாகத்தில் அமைந்திருக்கிறது நமது நாடு. நமது நாட்டுக்குத் தென்மேற்கில், சுமார் 1500 மைல் தொலைவில் ஒரு நிலப் பாகம் இருக்கிறது. அதற்கு **ஆப்பிரிக்காக் கண்டம்** என்பது பெயர். அதன் குறுக்கே பூமத்திய ரேகை அமைந்திருக்கிறது.

3. பூமத்திய ரேகையை அடுத்துள்ள நிலப் பகுதிகளில் வெப்பம் மிகுதியாய் இருக்கும். அதனால், மழையும் மிகுதியாய்ப் பெய்யும். வெப்பமும் மழையும் மிகுந்துள்ள அப்பகுதியில் அடர்ந்த காடுகள் உண்டு. அக்காடுகள் '**வெப்ப மண்டலக் காடுகள்**' எனப்படும். அவற்றின் தென்பகுதியில் ஒரு யாறு ஓடுகிறது. அதற்குக் **காங்கோ யாறு** என்பது பெயர்.

4. காங்கோ யாற்றின் இரு பக்கங்களிலும் உள்ள காடுகளில் ஒரு வகை மக்கள் வாழ்கின்றார்கள். அவர்களுக்கு ஆங்கிலேயரால் வழங்கப்பட்ட பெயர், '**பிக்மீஸ்**' என்பதாம். இச்சொல்லுக்குக் '**குள்ளர்கள்**' என்பது பொருள். மூத்த குள்ளர்களின் உயரம் நான்கு அடிக்குமேல் இராது. அவர்கள் காடுகளின் இடையில் உள்ள இடைவெளிகளில் சிறுசிறு குடிசைகளை அமைத்துக்கொண்டு வாழ்-

கிறார்கள். சாதாரணமாக ஓர் இடைவெளியில் இருபது முப்பது குடிசைகளுக்குமேல் இரா. இவை சிறிய ஊர்களைப் போலக் காணப்படும்.



5. பிக்மீக்களின் வாழ்க்கை மிகவும் விநோதமானது. அவர்கள் மரக்கொம்புகளைப் பூமியில் வட்டமாக நடுவார்கள்; அவற்றின் குறுக்கே கழிகளை வளைத்துக் கட்டி, வண்டிக்கூண்டு போலச் செய்து, காட்டுப் பனை ஓலையால் கூரை அமைப்பார்கள். அச்சிறு குடிசைகள் இறைசாலைப் பூமியில் கவிழ்த்தது போலக் காணப்படும். அவை அப் பிரதேசத்தில் பெய்யும் கனத்த மழையையும் தாங்கும்.

6. பிக்மீக்கள், குள்ளர்களாயினும், உடல் வலி-யும், மனவலியும் உடையவர்கள். அவர்கள் காடுகளில் வசிக்கும் சிங்கம் முதலிய கொடிய விலங்குகளுக்கும் அஞ்சமாட்டார்கள். வில்லும் அம்பும் அவர்கள் உபயோகிக்கும் கருவிகள். அம்புகளின் முனை விஷம் தோய்ந்தது. ஆதலால், அவ்வம்புகள் எந்தப் பிராணி-யின் உடலிற்பாய்ந்தாலும், அப்பிராணி இறப்பது நிச்சயம்.

7. விலங்குகளையும் பறவைகளையும் வேட்டை யாடுவதே பிக்மீக்களின் தொழில். அவர்கள் கொன்ற பிராணிகளின் இறைச்சியை உண்பார்கள்; காய் கனி கிழங்குகளும் புசிப்பார்கள். குரங்கு மாமிசமும், வாழைப் பழங்களும் அவர்கள் மிகவும் விரும்பி உண்ணும் பொருள்கள். காங்கோக் காடுகளில் ஒரு வகை வாழை உற்பத்தியாகிறது. அதன் தாறு, வெகு நீளமாய் இருக்கும். ஒரு குள்ளனே ஒரு தாற்றில் உள்ள பழங்கள் அனைத்தை-யும் தின்றுவிடுவான். இக்காலத்தில் இக்குள்ளர்-களும் ஆங்கிலேயரின் தொடர்பால் முன்னேறி வருகின்றார்கள்.

### அருஞ்சொற்பொருள்

கண்டம்—மிகப் பெரிய நிலப்பகுதி, சமுத்திரம் – மிகப் பெரிய நீர்ப் பரப்பு, பூமத்தியரேகை—பூமி உருண்டையின்மீது சரியாக நடுவில் கிழக்கு மேற்காக அமைந்திருப்பதாகப் பாவிக் கப்படும் கோடு, விநோதம்—ஆச்சரியம், பிராணி—ஜந்து, தாறு—குலை.

### பயிற்சி :

1. விடை எழுது :—

அ. 'கண்டம்' என்பது யாது? 'சமுத்திரம்' என்பது யாது?
ஆ. 'பூமத்திய ரேகை' என்பது யாது?

இ. வெப்ப மண்டலக் காடுகள் எங்கிருக்கும் ?

ஈ. பிக்மீக்கள் எங்கு வசிக்கிறார்கள் ?

உ. அவர்கள் வீடுகளை எவ்வாறு அமைத்துக்கொள்கிறார்கள் ?

ஊ. பிக்மீக்கள் எவ்வாறு வேட்டையாடுகிறார்கள் ?

எ. பிக்மீக்கள் மிக விரும்பி உண்பவை யாவை ?

**2. எதிர்ச்சொற்களை இணைத்தெழுது :—**

நனைதல் – நல்லொழுக்கம் – நினைவு – நீதி–நீளம்-பருத்த-பிறப்பு–பிடி–புதுமை–புகழ்ச்சி–புண்ணியம்.

மெலிந்த-இறப்பு–விடு–பழமை–இகழ்ச்சி–பாவம் – அநீதி-தீயொழுக்கம்–மறதி-குள்ளம்–உலர்தல்

**3. இதைத் தெரிந்துகொள் :—**

**ரகர —றகர வேற்றுமை :**

**கருப்பு** என்பது 'பஞ்சம்' என்னும் பொருள் உடையது.
**கறுப்பு** என்பது 'கருமை நிறம்' என்னும் பொருள் உடையது.

**கரை** என்பது 'எல்லை' என்னும் பொருள் உடையது. உதாரணம்:-கடற்**கரை**.

**கறை** என்பது 'அழுக்கு', 'மாசு', 'குற்றம்' என்னும் பொருள்களை உடையது. உதாரணம்:-மஞ்சள் கறை.

**கார்** என்பது 'மேகம்'; 'கரிய' என்னும் பொருள் உடையது.
**காறு** என்பது கலப்பையின் படையில் பொருத்தப்படும் '**இரும்புக் கம்பி**'யாகும்.

4. சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுது :—

தொலைவு, வெப்பம், இடையில், அமைத்து, விநோதம் கூரை, அம்பு, இறைச்சி, குலை.

## இலக்கணம் :

### வாக்கியம் :

கீழ் வருவனவற்றைப் படி :—

வெட்டினன் மணி மரம்—இம்மூன்று சொற்கள் ஒன்றை ஒன்று தொடர்ந்து நிற்கின்றன. ஆனால், முடிந்த கருத்தைத் தரவில்லை.

மணி மரம் வெட்டினன்.—அம்மூன்று சொற்களே ஒன்றை ஒன்று தொடர்ந்து நின்று ஒரு முடிந்த கருத்தைத் தெரிவிக்கின்றன.

**மனப்பாடம் செய் :**

**சொற்கள் ஒன்றையொன்று தொடர்ந்து நின்று, முடிந்த கருத்தைத் தெரிவிப்பவை வாக்கியம் ஆகும்.**

# 9. பத்திரிகைச் செய்தி—I

## (மனத்துள் படித்தல்)

[குறிப்பு :—இங்குத் தரப்படும் செய்திகளை மனத்துக்குள்ளேயே படித்து, செய்திகளின் கீழே இருக்கும் வினாக்களுக்கு விடை எழுத வேண்டும்.]

## சுதேச மித்திரன்

### மக்கள் நல்வாழ்வுக்கு ஆலயங்களின் தொண்டு: ஐந்தாம் தமிழ் விழாவில் திரு. பக்தவற்சலம் வரவேற்புரை :

சென்னை, ஆகஸ்டு. 23—

இன்று காலை தேனாம்பேட்டைக் காங்கிரஸ் மைதானத்தில் ஐந்தாம் தமிழ் விழாவுக்கு அனைவரையும் வரவேற்றுத் திரு. எம். பக்தவற்சலம் பேசியதாவது :

"தமிழகத்தின் தலைநகரான சென்னையில் நடைபெறும் ஐந்தாவது தமிழ்த் திருவிழாவிற்கு உங்கள் அனைவரையும் மனமுவந்து வரவேற்கின்றேன். இந்தப் பாக்கியத்தை எனக்களித்த வரவேற்புக் கழக அங்கத்தினர் எல்லாருக்கும் என் நன்றி உரியதாகுக.

"தமிழ் நாட்டு விஷயம் ஒவ்வொன்றுக்கும் தனிச் சிறப்பு உண்டு. எனினும், தமிழ் நாட்டில் தமிழுக்கென விழாக் கொண்டாடப்படுவது பலருக்கு விசித்திரமாகவே தோன்றும். ஏனெனில், எந்த நாட்டிலும் தாய் மொழிக்கெனத் தனி விழா நடைபெறுவது அபூர்வம். இங்கிலாந்தில் ஆங்கிலத்துக்கும், பிரான்ஸில் பிரெஞ்சுக்கும் விழாக்

கொண்டாடும் செய்தியைக் கேட்க முடியாது. அங்-கெல்லாம் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் ஒன்றோ-டொன்று இணைந்து நிற்கின்றன. அவை பிரிக்க முடியாமல் கலந்து விளங்குகின்றன. சுருங்கச் சொன்னால், மற்ற நாடுகளில் அந்தந்த நாட்டு மொழியே உயிர் நாடியாகப் பாதுகாக்கப்படுகிறது.

* * *

"தமிழ் மொழி மாறா இளமை வாய்ந்தது; கொள்ளக் குறையாத வளம் செறிந்தது. ஆனால், அதைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டிய பொறுப்பு நமக்குண்டு. அதைப்பற்றிக் கவலைப் படாதிருந்தால், தமிழ் மொழிக்கு எவ்வித நஷ்ட-மும் இல்லை. நஷ்டப்படுபவர் தமிழ் மக்களாகிய நாமேயாவோம்.

* * *

**சிற்பத்தின் தனிப் பெருமை :**

"மாமல்லபுரத்துச் சிற்பம் பொதுவாகத் தமிழ் நாட்டின்—சிறப்பாகத் தொண்டை நாட்டின்—கலைத் திறமைக்கு ஓர் அணிகலம். அதனை உலகம் முழுதும் பாராட்டி வருகிறது. அதன் மூலம் இந்திய நாட்டின் சிற்பத்துக்கே தனிப்பெருமை கிடைத்துள்ளது. அதைப்போலவே காஞ்சியில் உள்ள கைலாசநாதர் கோவில் சிற்பம், வைகுந்தப் பெருமாள்கோவில் சிற்பம் ஆகியவை இந்தியச் சிற்ப வரலாற்றில் சிறப்பிடம் பெற்று விளங்கு கின்றன.

"தொண்டை நாட்டு மக்கள் தம் கைத்திறமை-யைக் கல்லில் மட்டும் காட்டவில்லை; மக்களுக்குப் பயன்படும் பண்டங்களை உருவாக்கும் வகையிலும்

காட்டி வருகின்றனர். காஞ்சீபுரம் நெசவுத் தொழி-லுக்குத் தமிழ் நாடெங்கும் பிரசித்தி பெற்றது. 'காஞ்சீபுரம் சென்றால் காலாட்டிக்கொண்டு சாப்-பிடலாம்,' என்னும் பழமொழியும் பிறந்துள்ளது. இது தவிர, இப்பிரதேசத்தில் பெரும்பாலும் கிணற்-றுப் பாசனம் மூலமே உழவு நடைபெறுகின்றது.

**சென்னையின் சிறப்பு :**

"இப்பொழுது சென்னை நகரமாய் விளங்கி வரும் பிரதேசம், பல நூற்றாண்டுகளாகவே சரித்-திரப் பிரசித்தி பெற்றுள்ளது. சென்னையைச் சுற்றி உள்ள பிரதேசம், பழம்பாலாற்றங்கரை நாகரிகத்-தின் நிலைக்களனாய் விளங்கி வந்தது. சென்னைக்கு அருகே வடபுறத்தில் பேராறு ஒன்று அந்நாளில் ஓடிக்கொண்டிருந்தது. குடத்தலையாறு, கூவம் நதி முதலியவற்றைப் 'பழம்பாலாறு' என்று கூறுபவர் இன்றும் உளர். திருமுல்லை வாயில் பாலாற்றங் கரையில் இருந்ததாகச் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியுள்ளார். அந்தப் பழம்பாலாறு சுற்றுப் புறத்து மலைகளின் நீரையெல்லாம் கொண்டு ஒரு காலத்தில் ஓடியிருக்க வேண்டும். பிறகு அது பல பல காட்டாறுகளாகவும், கல்லாறுகளாகவும், அடையாறு, கூவம் முதலிய சிற்றாறுகளாகவும் மாறி மறைந்ததாக ஆராய்ச்சியாளர் கருதுகின்-றனர்.

"பழம்பாலாற்றங்கரையில் வாழ்ந்த கற்கால மக்களிடையே இறந்தவரைக் கல்லிட்டு மூடி அதன் மேல் கல்லை வளையமாக வைப்பதும், மண்ணால் செய்த பெரிய சால்களில் இறந்தவரை வைத்துப் புதைப்பதும் வழக்கமாயிருந்தன. கூடுவாஞ்சேரி,

பெரும்பெயர், ஆதித்தநல்லூர், சத்தியவேடு எனச் சென்னையைச் சுற்றியுள்ள இடங்களில் இவை கிடைத்துள்ளன. இவற்றைச் சென்னைக் கண்காட்சி நிலையத்தில் இன்றும் காணலாம். இவற்றின் மூலம் இரண்டாயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் இங்கு வாழ்ந்த மக்களின் குயவேலைத் திறம் நன்கு விளங்குகின்றது.

* * *

"இவ்வாறாகப் பழைய சரித்திர காலம் முதற் கொண்டு மக்கள் நாகரிக வளர்ச்சியின் வரலாற்றை அறிவதற்குச் சென்னைப் பிரதேசம் உதவியாய் இருந்து வருகிறது."

**வினாக்கள் :**

1. இச்செய்தி எந்தப் பத்திரிகையில், எந்தத் தேதியில் வெளி வந்தது?
2. இச்செய்தியில் குறிக்கப்படும் விழா எது?
3. விழாவுக்குச் சென்றவர்களை வரவேற்றுப் பேசியவர் யார்?
4. தமிழ் நாட்டில் தமிழுக்கு ஏன் விழாக் கொண்டாடப் பட வேண்டும்?
5. இம்மாதிரி விழா ஏன் பிற நாடுகளிற் கொண்டாடப் படவில்லை?
6. தமிழ் நாட்டுச் சிற்பங்களை விளக்கும் இடங்கள் எவை?
7. காஞ்சிபுரம் எந்தத் தொழிலுக்குப் பெயர் பெற்றது? அத்தொழில் குறித்து வழங்கும் பழமொழி யாது?
8. சென்னை எந்த நாகரிகத்துக்கு இருப்பிடமாய் இருந்தது?
9. 'பழம்பாலாறு' என்பது எந்நிலையை அடைந்து விட்டது?
10. பழம்பாலாற்றங்கரையில் வாழ்ந்த மக்களிடையே காணப்பட்ட வழக்கங்கள் யாவை?



## 10. குற்றாலமலை

1, தட்சிணப்பீடபூமியின் மேற்கு விளிம்பாய் அமைந்திருப்பது **மேற்கு மலைத் தொடர்.** இத் தொடர் மேற்குக் கரையோரமாய்க் குமரி முனை வரையில் அமைந்திருக்கிறது. மேற்கு மலைத் தொடரும் கிழக்கு மலைத்தொடரும் **நீலகிரியில்** சேர்கின்றன. நீலகிரிக்குத் தெற்கே மேற்கு மலைத் தொடர், **பழனிமலை, யானை மலை, ஏலமலை, அகஸ்தியமலை** என்னும் பெயர்களுடன் விளங்குகிறது.

2. திருநெல்வேலி ஜில்லாவில் உள்ள **தென்காசி** என்னும் புகை வண்டி நிலயத்திற்கு மூன்று மைல் தொலைவில் இருக்கிறது **திருக்குற்றாலம்** என்னும் சிவதலம். இதன் அருகில் அகத்தியமலை அழகாய் விளங்குகிறது. இங்கு இம்மலைக்குக் **குற்றால மலை** என்னும் பெயர் வழங்குகிறது. **திரிகூடமலை** என்பது இதன் வேறு பெயர்.

3. இம்மலைச் சரிவுகளில் வளம் நிறைந்த சோலைகள் காணப்படும். அச்சோலைகளில் மா,

பலா, வாழை முதலிய மரங்கள் செழித்து வளர்ந்திருக்கும். அம்மரங்களில் பழுத்துத் தொங்கும் கனிகள் காண்பவர் கண்ணைக் கவரும். அச்சோலைகளின் இடையில் தென்னை மரங்களும் பாக்கு மரங்களும் வானளாவி நிற்கும். அவற்றில் காய்கள் குலை குலையாய்க் காய்த்துத் தொங்கும். சோலைகள் இல்லாத இடங்களில் அடர்ந்த புதர்களும், தழைத்த செடிகளும், செழித்த கொடிகளும் காணப்படும். அவற்றில் மலர்ந்திருக்கும் பல நிற மலர்கள், பார்ப்பதற்கு மிகவும் அழகாய் இருக்கும்.

4. குற்றால மலையின்மீது சோலைகளும், செடி கொடிகளும் நிறைந்திருப்பதால், அவற்றில் பல உயிரினங்கள் வாழ்கின்றன. அவற்றுள் குரங்கினம் குறிப்பிடத்தக்கது. குரங்குகள் பழங்களைப் பறித்துத் தின்பதும், தங்கள் குட்டிகளுக்கு அவற்றைக் கொடுத்து இன்புறுவதும் காணத்தக்கவை. மாஞ் சோலைகளில் வாழும் குயில்கள் கூவுவதும், மலர்களில் தங்கியிருக்கும் தேனீக்கள் ரீங்காரம் செய்வதும் கேட்டு மகிழத் தக்கவை.

5. குற்றாலமலையின் அருகில் அமைந்துள்ள **குற்றாலநாதர்** ஆலயம், மிகவும் பழமையானது. அங்குள்ள நடராசப் பெருமான் சபைக்குச் **சித்திர சபை** என்பது பெயர். கோவிலின் உள்ளே இருக்கும் **குறும்பலா மரம்**, பல நூற்றாண்டுகளாகப் பட்டுப் போகாமல் இருப்பது ஆச்சரியப்படத் தக்கது.

6. கோவிலுக்கு மேற்புறத்தில் குற்றாலமலையிலிருந்து இழிந்து வரும் நீர் வீழ்ச்சி இருக்கிறது. அவ்வீழ்ச்சி நுரையுடன் பால் பொழிவது போலப்

பாறையினின்று விழுந்து நதியாய் ஓடுகிறது. அதற்குச் சித்திரா நதி என்பது பெயர். அந்நீர் வீழ்ச்சியை அடுத்துள்ள பாறைகளில் வெகு உயரத்தில் தேன்கூடுகள் பல எந்நாளிலும் காணப்படுகின்றன. அவற்றிலிருந்து சில சமயங்களில் தேன் சொட்டுவதையும் காணலாம்.

7. குற்றால நீர் வீழ்ச்சியில் நீராடுவதற்காக மக்கள் அங்குச் செல்கின்றார்கள். நீர் வீழ்ச்சி விழும் இடம் பாறை நிலமாதலால், பாசி படிந்து வழுக்கக் கூடியதாய் இருக்கிறது. அருவியில் நீராடும் மக்கள் வழுக்கி விழாமல் இருப்பதற்காக இரும்புக் கம்பங்கள் நாட்டப்பட்டுள்ளன நீராடுபவர் அவற்றைப் பற்றிக்கொண்டு கவனமாய்க் குளிக்க வேண்டும்.

8. ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் அவ்வருவியில் நீர் மிகுதியாய் விழும். அம்மாதங்களிலே தான் குற்றாலத்தின் இயற்கை அழகு மிகுந்து காணப்படும். ஆதலால், அக்காலத்தில் நமது நாட்டின் பல பாகங்களிலிருந்து மக்கள் அங்குச் செல்வார்கள். அப்போது குற்றாலம் ஒரு சிறு நகரம் போலக் காட்சியளிக்கும்.

**அருஞ்சொற்பொருள்:**

தட்சிணம்-தெற்கு, பீடபூமி - உயர்ந்த சமமான மேட்டு நிலம், விளங்குகிறது—காணப்படுகிறது, வளம் – செழுமை, கவரும்—ஈர்க்கும், தழைத்த—அடர்ந்த, ரீங்காரம்—ஒலி, பட்டுப் போகாமல்-உலர்ந்து போகாமல், சொட்டுதல்—சிந்துதல், நீராடுதல்—குளித்தல்.

## பயிற்சி :

1. **விடை எழுது :—**

அ. கிழக்கு மலைத் தொடரும், மேற்கு மலைத் தொடரும் எங்குச் சேர்கின்றன ?

ஆ. திருக்குற்றாலம் எந்த ஜில்லாவில் இருக்கிறது ?

இ. குற்றாலமலைச் சரிவுகள் எப்படி இருக்கும் ?

ஈ. குற்றாலத்தில் இருக்கும் கோவிலின் பெயர் யாது ?

உ. குற்றாலத்தின் நீர் வீழ்ச்சியைப்பற்றி இரண்டு வாக்கியங்கள் எழுது.

2. **இதைத் தெரிந்துகொள் :—**

**ரகர—றகர வேற்றுமை**

கிரி என்பது 'கிரிப்பிள்ளை' என்னும் ஜந்துவின் பெயர்.
கிறி என்பது 'கிழித்து' என்னும் பொருள் உடையது.

குரைத்தல் என்பது 'சத்தம் போடுதல்' என்னும் பொருளில் வரும்.

**உதாரணம்** :—நாய் குரைத்தது.

குறைத்தல் என்பது 'வெட்டுதல்', 'குறுகியதாக்குதல்' என்னும் பொருள்கள் உள்ளது.

3. **கீழ் வருவது நான்காம் வகுப்பில் வாசிக்கும் மீனாட்சி என்னும் பெண்ணால் எழுதப்பட்டது. நீ இதைப் போல உன்னைப்பற்றி எழுது :—**

என் பெயர் மீனாட்சி. எனக்கு வயது எட்டு. நான் புதுத் தெருவில் உள்ள இராசமன்னார் செட்டிபள்ளியில் படிக்கிறேன். என் தந்தையார் பெயர் வரகுணர். அவர் செய்வது டாக்டர் வேலை. என் தாயார் பெயர் கண்ணம்மாள். எனக்கு அக்காள் ஒருத்தியும், தம்பி ஒருவனும் இருக்கின்றனர்.




# 11. சர்க்கரை

1. நாம் உட்கொள்ளும் முக்கிய உணவுப் பொருள்களுள் சர்க்கரையும் ஒன்று. நாம் அதைத் தின்பண்டங்களிற்கலந்தோ, பானங்களிற் சேர்த்தோ உபயோகிக்கிறோம். இக்காலத்தில் நமது நாட்டிற் சர்க்கரை மிகுதியாய் உற்பத்தி செய்யப்படுகிறது. **பீகார், மைசூர், சென்னை** இராச்சியங்களே சர்க்கரையை மிகுதியாக உற்பத்தி செய்கின்றன. ஆயினும், நமது நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் சர்க்கரைத் தொழில் குடிசைத் தொழில்களுள் ஒன்றாய் நடைபெறுகின்றது.

2. சர்க்கரையும் வெல்லமும் கருப்பஞ்சாற்றால் செய்யப்படுகின்றன. கரும்பு, நாணல் வகையைச் சேர்ந்தது. அது வெப்பமண்டலப் பயிர். கரும்பை நஞ்சை நிலத்திலேதான் பயிர் செய்ய முடியும். நிலத்தைப் புழுதியாக உழுது, மஞ்சுகள் அமைத்து, அம்மஞ்சுகளுக்கிடையில் உள்ள கால்களில் நீர்

பாய்ச்சுவார்கள். நன்கு முதிர்ந்த கரும்புகளை ஒரு கணுவுள்ள துண்டுகளாக வெட்டி, அத்துண்டுகளை நீர் பாய்ச்சப்பட்ட கால்களில் நடுவார்கள். கரும்பின் ஒவ்வொரு கணுவிலும் உள்ள முளை சில நாட்களில் குருத்து விட்டு முளைக்கத் தொடங்கும்.

3. கரும்பிற் பலவகை உண்டு. மிகவும் கடினமான கரும்பிலேதான் நிரம்பச் சாறு இருக்கும். ஆதலால், சர்க்கரை உற்பத்தி செய்பவர் இவ்வகைக் கரும்பையே அதிகமாகப் பயிரிடுவர்; மற்றக் கரும்புகளை விழாக்களுக்கும், சந்தைகளுக்கும் கொண்டு போய் விற்றுவிடுவர். கரும்பு ஆறு அடி முதல் பன்னிரண்டடி வரை வளரும். கரும்பு நன்ருய் முற்றுவதற்குச் சுமார் பத்து மாதங்களாகும்.

4. கரும்பு செழித்து வளர வேண்டுமானல், நிலம் உரமுள்ளதாயும் உப்புச் சத்துள்ளதாயும் இருக்க வேண்டும். உரமற்ற நிலமாயின், எருவிட்டு உரப்படுத்த வேண்டும். கரும்புக்கு எப்போதும் ஈரம் இருக்க வேண்டும்; ஆனல், வேரில் நீர் தேங்கக் கூடாது. சில சமயங்களில் வண்டுகளாலும், புயற் காற்ருலும் கரும்புக்குச் சேதம் ஏற்படுவதுண்டு.

5. கரும்பு நன்ருய் முற்றிய பிறகு அதன் சோலைகளை நீக்கி, முனையைக் கழித்துவிடுவார்கள். கரும்பை வேர்ப்பக்கத்திலிருந்து தின்றுகொண்டே வந்தால், இனிமை குறைந்துகொண்டே வரும். நுனிக் கரும்பு உப்புக் கரிக்கும். ஆதலாலேதான் கரும்பின் நுனிப் பாகம் கழித்தெறியப்படுகிறது. சர்க்கரைத் தொழிற்சாலைகள் உள்ள இடங்களில் உற்பத்தியாகும் கரும்பு, மாட்டு வண்டிகளிலோ, இரயில் வண்டிகளிலோ ஏற்றப்பட்டு, ஆலைகளுக்கு

அனுப்பபப்படும். ஆலைகள் இல்லாத இடங்களில் பயிர் செய்யப்படும் கரும்பிலிருந்து நாட்டு முறையிற் சாறு பிழிந்து வெல்லம் அல்லது சர்க்கரை காய்ச்சுவார்கள்.

6. படத்தைப் பார். மாடுகள் சுற்றும் போது இயந்திரத்தில் உள்ள உருளைகள் சுழலும். இவ்வுருளைகளின் இடையில் கொடுக்கப்படும் கரும்பு நசுங்கிச் சாறு வெளிப்படும். பிழியப்படும் சாறு அதற்கென வைத்துள்ள கொப்பரையில் வந்து விழும். சாறு நீக்கப்பட்ட சக்கை அடுப்பெரிக்க உதவும்.

7. கருப்பஞ்சாற்றைக் கொப்பரைகளில் நிரப்பி அடுப்பேற்றிக் கொதிக்க வைப்பார்கள். அது நன்ருகக் கொதிக்கும் போது சிறிது சுண்ணும்பு நீரை விட்டுக் கலக்கினுல், சாற்றிலிருக்கும் அழுக்குத் திரண்டு வரும். இவ்வாறு இரண்டு மூன்று முறை அழுக்கு நீக்கப்பட்ட பிறகு, சாறு பாகாய் மாறும். மரப்பலகைகளில் உள்ள குழிகளில் பாகை விட்டு ஆறவைத்தால், அது இறுகி வெல்லமாகும். பாகைத் தொட்டிகளில் ஊற்றி அது கெட்டியாவதற்குமுன் கட்டைகளால் தேய்த்துக் கட்டியாகாமல் உதிரியாகச் செய்தால், சர்க்கரையாகும். இது **பழுப்புச் சர்க்கரை** எனப்படும்.

8. பழுப்புச் சர்க்கரையை வெள்ளைச் சர்க்கரையாக்குவதும் எளிதே: முதலில் பெரிய கொப்பரைகளில் பழுப்புச் சர்க்கரையைத் தண்ணீரில் கரைப்பார்கள். பிறகு அதை வடிகட்டி அடுப்பிலேற்றிக் காய்ச்சுவார்கள். அது கொதிக்கும் போது அதனுடன் சில இரசாயனப் பொருள்களைக் கலந்

தால், பாகு பழுப்பு நிறம் மாறி வெண்மை நிறம் அடையும்.

9. ஐரோப்பிய நாடுகளில் '**பீட்டு ரூட்டு**' என்னும் கிழங்கிலிருந்து சர்க்கரை செய்யப்படுகிறது. '**மேப்பிள்**' என்னும் மரத்திலிருந்தும் சில நாடுகளில் சர்க்கரை செய்யப்படுகிறது. ஆயினும், உலகமெங்கும் மிகுதியாக உற்பத்தி செய்யப்படுவதும், உபயோகப்படுவதும் கரும்புச்சர்க்கரையேயாகும். கிழக்கிந்தியத் தீவுகளுள் ஒன்ருகிய '**சாவா**'த் தீவிலும், மேற்கிந்தியத் தீவுகளுள் ஒன்ருகிய '**கியூபா**'த் தீவிலும் கரும்பு மிகுதியாய் உற்பத்தியாகிறது. அங்கு உற்பத்தியாகும் சர்க்கரை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

### அருஞ்சொற்பொருள்

தின்பண்டம்–பட்சணம், நாணல்–ஒரு வகைப் புல், மஞ்சு–மேடு, விழா–உற்சவம், உரம்-பலம்,(சத்து); புயற்காற்று–பெருங்காற்று, கழி–நீக்கு, கொப்பரை–அகன்ற பாத்திரம், திரண்டு–ஒன்றுசேர்ந்து, ஆறவை-குளிர வை, அயல் நாடு-வெளித்தேசம்.

### பயிற்சி :

1. விடை எழுது:—

அ. நமது நாட்டில் சர்க்கரையை மிகுதியாய் உற்பத்தி செய்யும் இராச்சியங்கள் எவை ?

ஆ. கரும்பு எவ்வாறு பயிரிடப்படுகிறது ?

இ. சர்க்கரை ஆலை இல்லாத இடங்களில் பயிரிடும் கரும்பை என்ன செய்வார்கள் ?

ஈ. கிராமங்களில் கருப்பஞ்சாறு எவ்வாறு பிழியப்படுகிறது ?

உ. வெல்லம் காய்ச்சும் முறை யாது ?

ஊ. சர்க்கரை எப்படிச் செய்யப்படுகிறது ?

**2. கீழ் வரும் இரண்டிரண்டு வாக்கியங்களை ஒவ்வொரு வாக்கியமாக்கி எழுது :—**

அ. 1. கரும்பை ஒரு கணு இருக்கும்படி வெட்டுவார்கள்.

2. கரும்பை நடுவார்கள்.

ஆ. 1. கரும்பில் முளை உண்டு.

2. அது குருத்து விட்டு முளைக்கும்.

இ. 1. மாடுகள் சுற்றி வரும்.

2. அப்போது உருளைகள் சுழலும்.

**3. உன் சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுது :—**

உணவுப்பொருள், குடிசைத்தொழில், முளை, குருத்து, எரு, புயற்காற்று, இயந்திரம்.

**4. கோட்டைச் சரியான சொல்லால் நிரப்பு :—**

அ. ——— பாம்பின் உடலைத் தன் பற்களால் ——— கொன்றது. (கீறி, கீரி)

ஆ. பாண்டியன் தனது கையை வாளால் ———. (குரைத்தான், குறைத்தான்)

இ. மலையைப் பார்த்து நாய் ———. (குறைத்தது, குரைத்தது)

ஈ. வேட்டியில் காப்பி ——— பட்டது. (கரை, கறை.)

உ. எனது வீடு ஏரிக் ——— அருகில் இருக்கிறது. (கரை, கறை)

# 12. கதைப் படம்

குறிப்பு :—படத்தைப் பார்த்துக் கதை சொல்லச் செய்தல் :





# 13. எனது பள்ளிப் படிப்பகம்

(உரையாடல்)

**இரமணன் :** கோபாலா, இன்று உங்கள் பள்ளியில் என்ன விசேஷம்? நெடுநேரங்கழித்து வருகிறாயே!

**கோபாலன் :** இன்று எங்கள் பள்ளிப் படிப்பகத்தின் திறப்பு விழா நடைபெற்றது. அறிஞர் ஒருவர் வந்து அதைத் திறந்து வைத்தார். ஆதலால், நேரமாயிற்று.

**இரம :** நீ கூறுவது எனக்கு விளங்கவில்லையே! 'படிப்பகம்' என்பது என்ன ?

**கோபா :** சொல்கிறேன். பள்ளியில் படிக்கும் பிள்ளைகள் தங்கள் வகுப்புக்களில் பாட புத்தகங்களை மட்டுமே படிக்கின்றார்கள். இந்தப் படிப்பால் உலக அறிவைப் பெற முடியாது. உலக அறிவைப் பெறுவதற்கு முக்கியமாகப்

பத்திரிகைகள் உதவுகின்றன ; வேறு நூல்களும் உதவி புரியும். இந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காகவே ஒவ்வொரு பள்ளியிலும் படிப்பகம் ஏற்படுத்தப்படுகிறது.

இரம: நமது வீட்டுக்குத் தினந்தோறும் பத்திரிகை வருகிறதே! அதை நீ வீட்டிலேயே படித்துவிடலாமே!

கோபா: உண்மைதான். நமது வீட்டுக்குப் பத்திரிகை வருகிறது. பள்ளியிற்படிக்கும் பிள்ளைகள் எல்லாருடைய வீடுகளிலும் பத்திரிகை தருவிக்கப்படுமா? அன்றியும், நமது வீட்டுக்கு ஒரே தினத்தாள்தான் வருகிறது. பள்ளிப் படிப்பகத்தில், காலையில் வெளியாகும் தினத்தாள் ஒன்றும், மாலையில் வெளியாகும் தினத்தாள் ஒன்றும் தருவிக்கப்படுகின்றன.

இரம: இரண்டு தினத்தாள்களைத் தருவித்தால், பள்ளியில் மேல் வகுப்புக்களில் படிக்கும் எல்லாரும் அவற்றைப் படிக்க முடியுமா?

கோபா: நான் சொல்லி முடிப்பதற்குள் அவசரப் படுகின்றாயே! பள்ளிப் படிப்பகத்திற்கு இரண்டு தினத்தாள்கள் மட்டும் தருவிக்கப் படுவதாக எண்ணிவிடாதே. நமது தமிழ் நாட்டில் தினத்தாள்கள் மட்டுமன்றி, வாரத் தாள், மாதத்தாள் முதலிய பல வகைத் தாள்கள் வெளி வருகின்றன. அவற்றுள் இளைஞர்க்குத் தக்க பத்திரிகைகளை எங்கள் படிப்பகத்துக்குத் தருவிக்கிறோம்.

இரம: சரி. அப்படியிருந்தாலும், அவை மாணவர் அனைவர்க்கும் படிக்கப் போதுமா?

கோபா: போதா என்பது உண்மையே. ஆனால், பள்ளிப் படிப்பகம் காலையில் பள்ளி தொடங்குவதற்கு ஒரு மணி நேரம் முன்னதாகத் திறக்கப்படுகிறது. மாலையில் பள்ளி முடிந்த பின் ஒரு மணி நேரம் அது திறந்து வைக்கப்படுகிறது. இந்த நேரத்தில் மாணவர் எல்லாரும் இருக்க மாட்டார். காலையில் சீக்கிரம் வரும் சிலரும், மாலையில் பள்ளியின் அருகில் வசிக்கும் சிலருமே படிப்பகத்துக்கு வந்து பத்திரிகைகளைப் படிப்பர். எங்கள் படிப்பகத்துக்கு மாணவர்க்கு ஏற்ற பத்திரிகைகள் பதினைந்து தருவிக்கப்படுகின்றன. அவற்றின் தொகை இரண்டொரு மாதங்களில் மிகுதியாய்ப் பெருகிவிடும். ஆதலால், படிப்பதற்கு வருபவர் அனைவர்க்கும் பத்திரிகைகள் கிடைக்கும்.

இரம: இது நல்ல முறைதான்! பிள்ளைகள் படிப்பகத்தைப் பயன்படுத்திக்கொள்வது மிகவும் நலமாயிருக்கும்.

### அருஞ்சொற்பொருள்

விழா-கொண்டாட்டம், அறிஞர்-புத்தி மிக்கவர், கூறுவது-சொல்வது, நூல்-புத்தகம், படிப்பகம்-படிக்கும் இடம், தினத்தாள்-தினந்தோறும் வெளியாகும் பத்திரிகை, இளைஞர்-சிறுவர்.

### பயிற்சி:

**1. விடை எழுது :—**

அ. 'படிப்பகம்' என்பது யாது?

ஆ. பள்ளிகளில் ஏன் படிப்பகம் ஏற்படுத்தப்படுகிறது?

இ. உனது பள்ளியில் படிப்பகம் உண்டா?

ஈ. இருந்தால், அதற்கு என்னென்ன பத்திரிகைகள் தருவிக்கப்படுகின்றன ?

2. கீழ் வரும் ஒவ்வொரு மாதிரி வாக்கியத்தைப்போல மூன்று வாக்கியங்கள் எழுது :—

**மாதிரி** 1. பாடத்தைப் படி.
,, 2. நாற்காலி மரத்தால் செய்யப்பட்டது.
,, 3. தசரதனுக்கு மகன் இராமன்.

3. இச்சொற்களை அமைத்துச் சொந்த வாக்கியங்கள் எழுது :—

படிப்பகம், விழா, பத்திரிகை, ஏற்பாடு, தருவி, இளைஞர்.




# 14. ஆறு

(பாட்டு)

கல்லும் மலையும் குதித்துவந்தேன்;—பெருங்
காடும் செடியும் கடந்துவந்தேன்;
எல்லை விரிந்த சமவெளிஎங்கும்—நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்துவந்தேன். 1

கட்டும் அணையேறிச் சாடிவந்தேன்;—அதன்
கண்ணறை தோறும் நுழைந்துவந்தேன்;
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன்;—மடைச்
சீப்புகள் மோதித் திறந்துவந்தேன். 2

காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன்;—அதில்
கண்குளி ரப்பயிர் கண்டுவந்தேன்;
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன்;—அங்கென்
ஆசைதீ ரவிளை யாடிவந்தேன். 3

ஏருத மேடுகள் ஏறிவந்தேன்;—பல
ஏரி குளங்கள் நிரப்பிவந்தேன்;
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன்;—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடிவந்தேன். 4

ஆயிரம் காலால் நடந்துவந்தேன்;—நன்செய்
அத்தனை யும்சுற்றிப் பார்த்துவந்தேன்;
நேயமு றப்புன்செய்க் காட்டிலும்—அங்கங்கு
நீரை இறைத்து நெடுகவந்தேன். 5

அல்லும் பகலும் அலைந்துவந்தேன்;—எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன்;
நில்லும் எனக்கினி நேரம்இல்லை—இன்னும்
நீண்டவ ழிபோக வேண்டும்அம்மா! 6

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள்



## 15. கப்பல் வரலாறு

1. பண்டைக் காலத்தில் மக்கள் மலைகளிலும், காடுகளிலும், ஆற்றோரங்களிலும், கடலோரங்களி-லும் வாழ்ந்து வந்தார்கள். யாறு, கடல் ஆகிய நீர் நிலைகளின் அருகில் வாழ்ந்த மக்களின் உணவுப் பொருள்களுள் மீனும் ஒன்று. ஆதலால், அவர்கள் நீர் நிலைகளில் இறங்கி, மீன் பிடிப்பது வழக்கம். ஆனால், அவர்கள் கரையோரங்களில் இருந்து மீன் பிடிக்க முடிந்ததே ஒழிய, நீரில் நெடுந்தூரம் செல்ல முடியவில்லை. ஆயினும், அவர்களது ஊன்றிப் பார்க்கும் வழக்கம் அவர்களுக்கு உதவியாயிருந்தது.

2. நீர் நிலைகளின் அருகில் வாழ்ந்த மக்கள், மிகப்பெரிய மரங்கள் நீரில் மிதந்து வருவதைக் கண்டார்கள்; ஆகவே, தாங்களும் மரத்துண்டு-களின் துணையால் நீரில் நெடுந்தூரம் செல்ல முடி-யும் என்பதை அறிந்தார்கள்; இரண்டு மூன்று மரத்துண்டுகளை ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக வைத்-

துக் கட்டி, அதன்மீது ஏறி, நீர் நிலைகளைக் கடக்கத் தொடங்கினார்கள். மரத்துண்டுகள் வைத்துக் கட்டப்பட்ட அதற்குக் **கட்டுமரம்** என்னும் பெயர் வழங்கலாயிற்று.

3. பின்னர் மக்கள் பெரிய மரத்துண்டுகளைக் குடைந்து அவற்றை உபயோகித்தார்கள். அக்காலத்தில் மரத்துண்டுகளைக் குடையத்தக்க கருவிகள் அவர்களிடம் இல்லை. ஆயினும், அவற்றைக் குடைய அவர்கள் மேற்கொண்ட உபாயம் மிகவும் விநோதமானது: பெரிய மரத்துண்டின்மீது குடைய வேண்டிய அளவுக்குக் களிமண்ணால் கரை அமைத்து அதன் மத்தியில் நெருப்பை மூட்டுவர். இதனால் மரத்துண்டு உட்பக்கம் எரிந்துகொண்டே போகும். மரத்தில் வேண்டும் அளவு எரிந்த பின் நெருப்பை அணைத்துக் கரியைத் தோண்டி எடுத்துவிடுவார்கள். இதற்குக் **குல்லா** என்பது பெயர்.

4. இரும்புக் கருவிகள் உபயோகத்துக்கு வந்த பிறகு மக்கள் மரங்களைப் பலகைகளாக அறுத்துக் குழைவாக இணைத்துத் **தோணி**யை உருவாக்கினார்கள். இவை எல்லாம் சிறிய நீர் நிலைகளைக் கடக்க உதவுமேயன்றி, அகன்ற கடலிற்செல்லப் பயன்படா. ஆதலால், மக்கள் பெரிய தோணிகளை அமைத்து, அவற்றின் இருபுறங்களிலும் பல துடுப்புக்களைப் பொருத்திக் கடலிற்செலுத்தத் தொடங்கினார்கள். அவை **மரக்கலங்கள்** என்று வழங்கலாயின. அம்மரக்கலங்களுக்குப் **பாய் மரங்கள்** அமைத்துக் காற்றின் உதவியால் அவற்றைச் செலுத்தி வந்தார்கள். அவை **பாய்மரக் கப்பல்கள்** என்று வழங்கலாயின.

5. இக்காலத்தில் கடல்களைக் கடக்க **நீராவிக் கப்பல்கள்** பயன்படுகின்றன. நீராவியின் சத்தியை முதலில் அறிந்து உலகுக்கு அறிவித்தவர், **ஜேம்ஸ் வாட்டு** என்பவர். அச்சத்தியைப் புகை வண்டியை இயக்க முதன்முதல் உபயோகித்தவர், **ஜார்ஜ் ஸ்டீபென்சன்** என்பவர். அதன் பிறகு நீராவிக் கப்பல் செலுத்தவும் வேறு பல பொறிகளை இயக்கவும் நீராவி உபயோகிக்கப்படலாயிற்று.



**அருஞ்சொற்பொருள் :**

வரலாறு,—சரித்திரம்; நீர் நிலை-நீர் தேங்கியிருக்கும் இடம், துணை - உதவி, தொடங்கு – ஆரம்பி, விநோதம் – ஆச்சரியம், குழைவு-வளைவு, பொறி-இயந்திரம், இயக்க–செலுத்த.

**பயிற்சி :**

1. **விடை எழுது :—**

அ. நீர் நிலைகளைக் கடக்க மக்கள் முதன்முதல் உபயோகித்த சாதனம் எது ?

ஆ. குல்லா எவ்வாறு செய்யப்பட்டது ?

இ. கட்டுமரத்துக்கு அப்பெயர் வரக் காரணம் என்ன ?

ஈ. 'தோணி' என்பது யாது? அது எவ்வாறு செய்யப்பட்டது ?

உ. நீராவியின் சத்தியை முதன்முதல் கண்டறிந்தவர் யார் ?

ஊ. ஜார்ஜ் ஸ்டீபென்சன் என்பவர் யார் ? அவர் கண்டு பிடித்தது என்ன ?

**2. இதைத் தெரிந்துகொள் :—**

**ரகர—றகர வேறுபாடு**

கூரிய என்பது 'கூர்மையான' என்னும் பொருள் பெறும்.
கூறிய என்பது 'சொல்லிய' என்னும் பொருள் பெறும்.

கூரை என்பது வீட்டின் மேற்கூரையைக் குறிக்கும்.
கூறை என்பது மணமகனும் மணமகளும் அணியும் ஆடையைக் குறிக்கும்.

**3. மேலே குறிக்கப்பட்ட சொற்களை அமைத்துச் சொந்த வாக்கியங்கள் எழுது.**

**4. எதிர்ப்பதங்களைப் பொருத்தி எழுது :—**

இயற்கை—இளமை—ஈந்தான்—ஈரம்—
உண்டு—உபகாரம்—உயர்வு—உள்ளே—

இல்லை—அபகாரம்—தாழ்வு—வெளியே—
ஏற்றான்—செயற்கை—முதுமை—வறட்சி—

# 16. பத்திரிகைச் செய்தி - II

## (மனத்துள் படித்தல்)

[குறிப்பு :—இங்குத் தரப்படும் செய்திகளை மனத்துக்குள்ளேயே படித்து, செய்திகளின் கீழே தரப்பட்டுள்ள வினக்களுக்கு விடை எழுத வேண்டும்.]

## சுதேச மித்திரன்

### சிறுவர்களுக்கு ஸ்ரீ நேரு போதனை :

### இந்தியா என்பது எது ?

### அடிப்படை ஒற்றுமையை உணருங்கள்.

சென்னை, அக்டோபர், 11.

"இந்தியா என்பது ஒன்று ; காஷ்மீரத்திலிருந்தாலும், கன்னியா குமரியில் இருந்தாலும் எல்லாரும் இந்தியர்களே. இந்த உணர்வு உங்களுக்கு வேண்டும். மத, ஜாதி வேற்றுமைகள் இந்த அடிப்படை உண்மையை உணர்வதற்குத் தடங்கலாய் இருக்கக் கூடாது."

என்று பிரதம மந்திரியார் ஸ்ரீ ஜவஹர்லால் நேரு நேற்று மாலை கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் கூடியிருந்த முப்பத்தையாயிரவருக்கு மேற்பட்ட உயர்நிலைப் பள்ளிச் சிறுவர் சிறுமியர் கூட்டத்தில் கூறினர்.

சென்னை நகரத்தில் உள்ள எல்லா உயர்நிலைப் பள்ளியிலிருந்தும் சுமார் முப்பத்தையாயிரம் மாணவ மாணவிகள் நேற்றுக் கார்ப்பொரேஷன் ஸ்டேடியத்தில் கூடியிருந்தார்கள்.

பண்டித ஜவஹர்லால் நேரு திறந்த மோட்டாரில் நின்றுகொண்டு, மாணவ மாணவியர்

அமர்ந்திருந்த மேடைகளின் ஓரமாக ஸ்டேடியம் முழுதும் ஒரு முற்ற சுற்றி வந்தார். மாணவர் எல்லாரும் மகிழ்ச்சியால் 'ஜே' கோஷம் செய்தனர்.

கல்வி இலாக்கா டைரெக்டர் திரு. கோவிந்த ராசுலு நாயுடு, கல்வி மந்திரியார் டாக்டர் எம். வி. கிருஷ்ண ராவ், சென்னைத் தலைமை ஆசிரியர் சங்கத் தலைவர் திரு. குருவில்லா ஜேகபு ஆகியோர் பிறகு நேருவை எதிர்கொண்டழைத்தனர். அவர்கள் நேருவை ஸ்டேடியத்தின் மத்தியில் என். ஸி. ஸி. படையினர், சாரணச் சிறுவர், சிறுமியர்களின் அணி வகுப்பைக் காண அழைத்துச் சென்றார்கள். அணி வகுப்பை ஸ்ரீ நேரு பார்வையிட்டார்.

பிறகு திரு. ஜேகபு பிரதமரை வரவேற்றுப் பேசுகையில், "இங்குக் கூடியுள்ள முப்பத்தையாயிரவருக்கு மேற்பட்ட சிறுவர் சிறுமியர் சுதந்தர இந்தியாவில் உங்களுடைய தலைமையில் வளர்ந்து வரும் தலை முறையினர். இந்த நாட்டை நன்கு வளர்க்க இளைஞர்கள்மீது நீங்கள் நம்பிக்கை வைத்திருப்பது எங்களுக்குத் தெரியும். சந்தர்ப்பம் கிடைத்தால், இந்தச் சிறுவர் சிறுமியர் எல்லாரும் உங்கள் அழைப்புக்கிணங்கத் தேசத்துக்குச் சேவை செய்ய மகிழ்ச்சியுடன் முன் வருவார்கள் என்று நாங்கள் உறுதி அளிக்கிறோம்,' என்று கூறினார்.

பிறகு ஸ்ரீ நேருவுக்கு மாலை சூட்டப்பட்டது. தமக்கு அளிக்கப்பட்ட மிகப் பெரிய பூச்செண்டை நேரு குடை போலத் தலைக்குமேல் பிடித்துக் கொண்டார்.

## ஸ்ரீ நேருவின் பிரசங்கம்

ஸ்ரீ நேரு பேசியதாவது :

"உங்கள் தாய்மொழியிலேயே பேசவேண்டுமென்று எனக்கு ஆவல்; அல்லது இந்தியில் பேசலாம். ஆனால், உங்களில் பலர் அந்தப் பாஷையைப் புரிந்துகொள்ள முடியாது. ஆதலின், ஆங்கிலத்திலேயே பேசவேண்டியவனாய் இருக்கிறேன். இதையும் நீங்கள் எல்லாரும் புரிந்துகொள்ள முடியாது; பலர் புரிந்துகொள்ளலாம்."

"நான் இங்கு வந்து உங்கள் அணிவகுப்பைக் காணுவதில் மட்டற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. மாபெருஞ் சென்னை நகரில் நீங்கள் வசிக்கிறீர்கள். வடவிந்தியாவிலிருந்து நான் வந்திருக்கிறேன். இப்போது நான் டில்லி நகரிலேயே பெரும்பாலும் காலத்தைக் கழிக்கிறேன். உல்லாசத்துக்காக அல்ல; எனது தாயகமான அலகாபாதிலிருந்து நான் டில்லிக்குச் சென்றேன். அலகாபாது புராதன நகரம்; கங்கையும் யமுனையும் சந்திக்கும் புண்ணிய பூமி. நெடுநாளைக்கு முன்பு எங்கள் வமிசத்தார் காஷ்மீரத்திலிருந்து டில்லி வழியாய் வந்து, அலகாபாதில் குடியேறினர். காஷ்மீருக்கு நீங்களும் ஒரு நாள் போவீர்கள் என்று நம்புகிறேன். இந்தியாவின் பூகோள படத்தை உற்றுப் பாருங்கள். வடக்கே காஷ்மீரும், தெற்கே குமரி முனையும் இருக்கின்றன. இந்த இரண்டுக்கும் இடையே சுமார் இரண்டாயிரம் மைல் இருக்கிறது. இவற்றிற்கு இடையே உள்ள பரந்த பிரதேசம் முழுவதும் இந்தியா. நீங்களும் நானும் இந்தியாவில்

எந்தக் கோடியில் வசித்தாலும், எல்லாரும் இந்தியாவின் பிரஜைகளே.''

**வினுக்கள் :**

1. இச்செய்தி எந்தப் பத்திரிகையில் வெளி வந்தது ?
2. நேரு எங்குப் பேசினுர் ? யாரை நோக்கிப் பேசினுர் ?
3. நேருவை எதிர்கொண்டழைத்தவர் யாவர் ?
4. நேரு யாருடைய அணி வகுப்பைப் பார்வையிட்டார் ?
5. நேருவின் மூதாதைகள் எந்நாட்டைச் சேர்ந்தவர்கள் ?
6. நேருவின் தாயகம் எது ?
7. இந்தியாவின் வடவெல்லையாயுள்ள நாடு எது ?
8. இந்தியாவின் தெற்கு எல்லை எது ?
9. நேரு மாணவ மாணவிகளுக்கு என்ன உணர்வு வேண்டும் என்று கூறினுர் ?
10. இந்த உணர்வைப் பெறுவதற்கு எவை தடங்கலாய் இருக்கக் கூடாது ?

## 17. எனது நிழல்

(பாட்டு)

என்றன் நிழலது எப்பொழுதும்
என்னை நீங்கா தேதொடரும்! 1

சிகைமுதல் நகம்வரை எனதுருவம்
சிறிய நிழலது ஒத்துவிழும்! 2

நீண்டும் குறுகியும் விதவிதமாய்
நிழலது மாறிடும் அதிசயமாய்! 3

காலைப் பொழுதினில் நீண்டிருக்கும்;
கடும்பகல் தன்னிற் குறுகிவிடும்! 4

மாலைப் பொழுதில் மறுபடியும்
வரம்பில் லாமல் வளர்ந்துவிடும்! 5

நான்செயும் வேலைகள் அத்தனையும்
தான்செய்து மகிழும் முற்றிலுமே! 6

எனையது கணமும் பிரியாமல்
எங்குந் தொடரும் மறையாமல்! 7

கதிரவன் உதிக்குமுன் ஒருகாலை
கடுகி யடைந்தேன் பூஞ்சோலை! 8

அத்தினம் அந்நிழல் அங்கில்லை;
அதுஎனைத் தொடர்ந்து வரவில்லை; 9

தூக்கமோ, என்னவோ, தெரியாது;
தனித்தது என்பின் வாராது! 10

—த. சே. உமாபதி

# 18. கதைப் படம்

குறிப்பு: படத்தைப் பார்த்துக் கதையைச்
சொல்லச் செய்தல்:





## 19. நரியும் நாரையும்

ஒரு காட்டில் ஒரு நரி வசித்து வந்தது. அது மிகுந்த தந்திரமும், பிற விலங்குகளை ஏமாற்றும் இழிகுணமும் உடையது. ஒரு நாள் அந்நரி ஒரு குளக்கரையில் நின்றுகொண்டிருந்த நாரையைக் கண்டது; உடனே அப்பறவையை ஏய்க்க வேண்டும் என்ற எண்ணம் நரியின் உள்ளத்தில் உதித்தது.

நரி: நாரையே, வந்தனம்! ஏன் வாட்டமாய் நிற்கின்றாய்?

நாரை: நரியே, வந்தனம்! நீ கூறுகிறபடி நான் வாட்டமுற்று நிற்கவில்லை. ஒரு காரியமாக நின்றுகொண்டிருக்கிறேன்.

நரி: காரியம் தெரிகின்றது! ஏதேனும் மீன் வரும் என்றுதானே நிற்கின்றாய்? அகத்தின் அழகு முகத்தில் தெரியுமே! நீ நெடுநேரமாய்

நின்றும் மீன் ஏதும் கிடைக்கவில்லை போலத் தோன்றுகிறது! அதனால், நீ பசியுடன் இருக்கிறாய் என்பதை உன் நிலை தெரிவிக்கிறது. இதற்காக வருந்த வேண்டா. நீ எனக்கு நெடுங் கால நண்பன் அல்லவா? என்னோடு எனது வீட்டுக்கு வா. நல்ல இனிய உணவு தருகிறேன்.

**நாரை :** நண்பா, நீ அவ்வளவு சொன்னதே போதும்! நீ போய் வா.

**நரி :** நண்பா, நான் கூறுவது உண்மை! தயவு செய்து என்னுடன் வா. நிச்சயமாக உனக்கு இனிய இரை தருகிறேன்.

நரியின் பேச்சை நாரை நம்பிவிட்டது; ஆதலால், நரியுடன் செல்ல இசைந்தது.

நரி தனது வீட்டை அடைந்தது; ஓர் அகன்ற தட்டில் பாயசத்தை நிரப்பியது; அத்தட்டை நாரையின் முன் வைத்து நாரையைப் பார்த்து, "நண்பா, இது பானவகைகளிற் சிறந்தது; இனிமை மிகுந்தது; சாப்பிடு," என்று சொல்லியது.

நாரையின் அலகோ, மிகவும் நீண்டது; பாயசமோ, பரந்த தட்டில் இருந்தது. பாவம்! நாரை அதை எப்படிக் குடிக்க முடியும்! ஆகவே நாரை, செய்வது இன்னதெனத் தெரியாமல், பாயசத்தைக் குடியாமல் நின்றுகொண்டிருந்தது.

நரி, மீண்டும் நாரையைப் பார்த்து, "நண்பா, ஏன் சும்மா நிற்கின்றாய்? உனக்குப் பாயசம் பிடியாதோ? பிடியாவிட்டால் என்னிடம் கொடுத்து விடு," என்று சொல்லிற்று. நரியால் ஏய்க்கப்பட்ட நாரை, தனது நாணத்தை மறைத்துக்கொண்டு,

"நண்பா, நீ கூறுவது உண்மையே. எனக்குப் பாயசம் பிடியாது. இதை நீயே சாப்பிடு. நான் சென்று வருகின்றேன்," என்று கூறிப் போய் விட்டது.

சில நாட்கள் சென்றன. ஆயினும், நாரை நரி-யின் வஞ்சனையை மறக்கவில்லை. அது தன்னை ஏய்த்த நரிக்குத் தக்க பாடம் கற்பிக்க வேண்டும் என்று எண்ணியிருந்தது. ஒரு நாள் தற்செயலாய் நாரை நரியைக் கண்டது.

**நாரை :** நரியே, வந்தனம்! நீ சில நாட்களாக இந்தப் பக்கம் வரவே இல்லையே!

**நரி :** வந்தனம்! வாராமலென்ன!

**நாரை :** இன்று நீ எனது வீட்டுக்கு விருந்தாய் வரவேண்டும்.

**நரி :** என்ன விசேஷம்?

**நாரை :** விசேஷம் எதுவுமில்லை. இன்று என் மனைவியின் பிறந்த நாள். வா, போகலாம்.

நாரை தன்னை வஞ்சிக்க முடியாது என்று எண்ணி, நரி உடன்பட்டது. நாரை நரியை அழைத்-துச் சென்று, வாய் குறுகிய ஒரு ஜாடியைக் கொண்டு வந்தது; நரியின் முன் வைத்தது. ஜாடியில் மீன்களும் நண்டுகளும் இருந்தன. நாரை, நரியைப் பார்த்து, "நண்பா, சாப்பிடு," என்று சொல்லித் தனது நீண்ட அலகை ஜாடியின் குறுகிய வாயினுள் விட்டுத் தின்னத் தொடங்கியது. ஜாடியின் குறுகிய வாயினுள் நரியின் தலை புகவில்லை. பாவம்! நரி என்ன செய்யும்! ஜாடியைச் சுற்றிச் சுற்றி வந்தது.

நாரை நரியைப் பார்த்து, "நண்பா, ஏன் சுற்றிச் சுற்றி வருகிறாய்? உனக்கு இவ்வுணவு பிடிக்க வில்லையோ?" என்று கேலியாகக் கேட்டது.

நரி வெட்கமடைந்து ஓட்டம் பிடித்தது. ஓடும் போது, அது, 'மோசக்காரன் மோசம் போவான் என்பது உண்மையாயிற்று,' என்று எண்ணிக் கொண்டே ஓடியது.

**அருஞ்சொற்பொருள் :**

பிற-மற்ற, இழிகுணம்—தாழ்ந்த குணம், ஏய்க்க-ஏமாற்ற, வாட்டம்-சோர்வு, இரை-உணவு, பானம் - குடிப்பதற்குரிய பொருள், சுவைக்க - உருசி பார்க்க, உடன்பட்டது – ஒப்புக் கொண்டது, தொடங்கியது-ஆரம்பித்தது, புசிக்கிறேன்-சாப் பிடுகிறேன்.

**பயிற்சி :**

1. **விடை எழுது :—**

அ. நரி எத்தன்மையான விலங்கு ?

ஆ. நரி ஏன் நாரையை விருந்துக்கு அழைத்தது ?

இ. நரி நாரைக்குப் படைத்த உணவு என்ன ?

ஈ. நாரை ஏன் அதை உண்ண முடியவில்லை ?

உ. நாரை நரியை எப்படி ஏமாற்றியது ?

ஊ. இக்கதையால் நாம் அறியும் நீதி என்ன ?

2. **கீழே தரப்பட்டுள்ள சிறு குறிப்பு, குமரன் தனது கிரா—மத்தைப் பற்றி எழுதியது. நீ உனது கிராமத்தைப் பற்றி ஒரு குறிப்பு எழுது :—**

எனது கிராமம் திருப்போரூர். அது சென்னைக்குத் தெற்கே 26 மைல் தொலைவில் இருக்கிறது. அது முருகன் தலம். அங்கு ஒரு சிறு குன்று உண்டு. ஊரில் ஒரு கோவிலும், குன்றின்மேல் ஒரு கோவிலும் இருக்கின்றன. கோவிலைச் சுற்றி ஊர் அமைந்—திருக்கிறது. மாதந்தோறும் கிருத்திகையன்று இக்கோவிலுக்கு

மக்கள் திரளாக வருகின்றார்கள். அன்று கடைகள் பல காணப் படும். அவற்றைப் பார்த்து நாங்கள் மகிழ்வோம்.

**3. இதைத் தெரிந்துகொள் :—**

| இப்படிச் சொல்லாதே. | இப்படிச் சொல். |
|---|---|
| அவல் | அவள் |
| பல்லம் | பள்ளம் |
| குல்லம் | குள்ளம் |
| பளம் | பழம் |
| கிளவன் | கிழவன் |
| குளம்பு | குழம்பு |

**4. சொற்களைப் பிரித்து இடையே இடம் விட்டு எழுது :—**

காந்தியடிகளைமகாத்துமாஎன்றுஉலகத்தவர்புகழ்ந்தனர்
அவர்எப்போதும்சத்தியமேபேசும்வழக்கம்உடையவர்
இந்தியாவுக்குச்சுதந்தரம்வாங்கித்தந்தவர்காந்தியடிகளே
காந்தியடிகளின்பெயரைஅறியாதஇந்தியர்ஒருவரும்
இரார்காந்தியடிகள்தமதுகுற்றத்தைஒப்புக்கொள்ளும்
குணம் படைத்தவர்



## 20. சென்னை நகரம்

1. நமது நாடு **ஐக்கிய இந்தியா**. இதை ஆங்கிலத்தில் **'இந்திய யூனியன்'** என்கிறோம். நமது நாட்டிற் பல பிரிவுகள் உள்ளன. அவற்றுள் ஒன்று, நாம் வாழும் **சென்னை** இராச்சியம். இதன் தலைநகரமாய் விளங்குவது **சென்னை நகரம்.** இதற்குச் **சென்னப் பட்டினம், மதராஸ்** என்னும் வேறு பெயர்களும் உண்டு. சென்னை நகரம் தோன்றிய வரலாற்றையும், அதன் பெயர்கள் தோன்றிய காரணங்களையும் இப்பாடத்தால் அறியலாம் :

2. நமது நாட்டில் பல பட்டணங்கள் உண்டு. அவற்றுள் **காசி, காஞ்சி, மதுரை** என்பவை நெடுங்காலத்தவை. **சென்னை, பம்பாய், கல்கத்தா** என்பவை சமீபகாலத்தில் தோன்றியவை. நமது சென்னை நகரம் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்குமுன் இந்தியாவில் வாணிகம் செய்ய வந்த **ஆங்கிலேயரால்** தோற்றுவிக்கப்பட்டது.

3. இந்தியாவில் வாணிகம் செய்ய வந்த ஆங்கிலேயர், மேற்குக் கடற்கரையில் **சூரத்துப் பட்டினத்திலும்**, கிழக்குக் கரையில் **மசூலிப் பட்டினத்திலும்** பண்டசாலைகளைக் கட்டிக்கொண்டனர்; பிறகு, கீழ்க்கரையில் மசூலிப்பட்டினத்துக்குத் தெற்கே ஒரு புதிய பண்டசாலையை அமைக்க விரும்பினர். இப்பொறுப்பு, **பிரான்ஸிஸ் டே** என்ற ஆங்கிலேயரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் 1639-ஆம் ஆண்டில், இக்காலத்திற் சென்னை நகரம் உள்ள பகுதியைப் பார்வையிட்டார்; **கூவம்** நதிக்கு வடபகுதியே பண்டசாலை அமைக்க ஏற்ற இடம் என நிச்சயித்தார்.

4. அக்காலத்தில் சென்னைப் பகுதி **சந்திரகிரி** மன்னருக்கு உரியதாயிருந்தது. அதனை மேற்பார்வை செய்து வந்தவர் **பூவிருந்தவல்லியில்** வாழ்ந்திருந்த பாளையக்காரர் ஒருவர். பிரான்ஸிஸ் டே அவரிடம் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார். அதன்படி ஆங்கிலேயர் கூவம் யாற்றுக்கு வடக்கே ஒரு பண்டசாலையை அமைத்துக்கொண்டு வாணிகம் செய்ய அனுமதிக்கப்பட்டனர். அதற்கு ஈடாக வருடந்தோறும் ஆயிரத்து இருநூறு வராகன் ஆங்கிலேயர் வரி செலுத்த வேண்டும். அன்றியும், ஆங்கிலேயர் அமைக்கும் பண்டசாலையைச் சூழ்ந்து தோன்றும் பட்டினத்துக்கு அப்பாளையக்காரரின் தந்தையார் பெயரை வழங்க வேண்டும்.

5. அந்த ஒப்பந்தத்தின்படி ஆங்கிலேயர் கூவம் யாற்றுக்கு வடக்கே ஒரு கோட்டையைக் கட்டினர். அதற்குச் **'செயிண்டு ஜார்ஜ் கோட்டை'** என்னும் பெயர் வழங்கலாயிற்று.

அக்காலத்தில் கோட்டையின் அருகில் மக்கள் வசிக்கவில்லை; தெற்கில் **திருவல்லிக்கேணி, மயிலாப்பூர்**



என்னும் இடங்களில் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். அங்ஙனமே வடக்கில் **தண்டையார் பேட்டை, திருவொற்றியூர்** என்னும் இடங்களில் மட்டும் மக்கள் வாழ்ந்து வந்தார்கள். நாளடைவில் கோட்டையின் உள்ளிருந்த ஆங்கிலேயரோடு வாணிகம் நடத்துவதற்காகக் கோட்டையின் அருகில் மக்கள் குடியேறினர்கள். வீடுகளும் கடைகளும் கோவில்களும் விரைவில் தோன்றின. இவ்வாறு சென்னை நகரம் உருவாயிற்று. இதற்கு ஆங்கிலேயர் தமது ஒப்பந்தப்படி **சென்னப்பன் பட்டினம்** என்னும் பெயரை வழங்கினர். நாளடைவில் அது சென்னபட்டினம் என்று வழங்கிப் பிறகு **சென்னை** என்னும் குறுகிய பெயரால் வழங்கலாயிற்று.

6. இனி '**மதராஸ்**' என்னும் பெயர் தோன்றிய வகையை ஆராயலாம்: இதற்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் இரண்டை மட்டும் கவனிப்போம்: தெலுங்கு மொழியில்

சிற்றரசருக்குச் '**சாமந்தராஜுலு**' என்பது பெயர். சந்திரகிரிச் சிற்றரசருக்கு உரிய இடத்தில் தோன்றிய பட்டினத்துக்குச் **சாமந்தராஜுலு பட்டினம்** என்னும் பெயர் வழங்கி வந்தது. பிறகு அப்பெயர் **மந்தராசுலு பட்டினம்** என மாறிக் கடைசியில் **மதராஸ் பட்டினம்** என்று வழங்கலாயிற்று என்பர் சிலர்.

7. செயிண்டு ஜார்ஜ் கோட்டை கட்டப்பட்ட பொழுது கூவம் யாற்றுக்குத் தெற்கே ஒரு குப்பம் இருந்தது. அங்கு **மதுரேசர்** என்ற பெயர் உடைய நாட்டாண்மைக்காரர் ஒருவர் இருந்தார். அவர் ஆங்கிலேயரிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந்தார். ஆதலால், அவர் பெயரால் இப்பட்டினத்துக்கு **மதுரேசன் பட்டினம்** என்ற பெயர் வழங்கலாயிற்று. நாளடைவில் அது **மதராஸ் பட்டினம்** என்று வழங்கிவிட்டது என்பர் சிலர். எது உண்மை என்பது நிச்சயிக்கக் கூடவில்லை; அதைப் பற்றி நமக்குக் கவலையுமில்லை. அதை நாம் இக்காலத்தில் சென்னை என்றே வழங்கி வருகிறோம்.

**அருஞ்சொற்பொருள்:**

ஐக்கியம் – ஒற்றுமை, ஆங்கிலம் – இங்கிலீஷ், அரசு - இராச்சியம், வரலாறு–சரித்திரம், தோன்றியவை–உண்டானவை, வாணிகம்-வியாபாரம், பொறுப்பு-கடமை, பண்டசாலை–சரக்கு அறை, ஏற்ற-தகுந்த, உரியது-சொந்தம், ஒப்பந்தம்-உடன்படிக்கை, குறுகிய-குறைந்த, நாட்டாண்மைக்காரர்-ஊர்த்தலைவர்.

**பயிற்சி :**

1. **விடை எழுது :—**

அ. சுமார் எத்தனை ஆண்டுகளுக்குமுன் சென்னை தோன்றியது ?

ஆ. பிரான்ஸிஸ் டே எந்த இடம் பண்டசாலை கட்ட ஏற்றதெனக் கண்டார்?

இ. இப்போது சென்னை நகரம் இருக்கும் இடம் அக்காலத்தில் யாருக்குச் சொந்தமாய் இருந்தது?

ஈ. பிரான்ஸிஸ் டே யாரிடம் ஒப்பந்தம் செய்துகொண்டார்? அவர் செய்த ஒப்பந்தம் யாது?

உ. சென்னப்பட்டினம் என்னும் பெயர் தோன்றக் காரணம் என்ன?

ஊ. மதராஸ் என்னும் பெயர் தோன்றக் காரணம் யாது?

**2. இதைத் தெரிந்துகொள் :—**

| இப்படிச் சொல்லாதே. | இப்படிச் சொல். |
|---|---|
| சுடு தண்ணி | வெந்நீர் |
| பச்சைத் தண்ணி | தண்ணீர் |
| இசு | இழு |
| கயித்து | கழுத்து |
| கொண்டா | கொண்டுவா |
| கிட்டே | அருகில் |
| கண்ணுகுட்டி | கன்றுக்குட்டி |

**3. சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுது :—**

வரலாறு, நெடுங்காலம், சமீபகாலம், வாணிகம், உரியது, வரிப்பணம், காரணம், நிச்சயம்

## இலக்கணம்

### பெயர்ச் சொல் :

**இவற்றைப் படி :—**

1. **முருகன், திருமால்**—கடவுளின் பெயர்கள்.
2. **சுந்தரன், சுந்தரி**—மனிதரின் பெயர்கள்.
3. **எருது, குதிரை**—விலங்குகளின் பெயர்கள்.
4. **மயில், புரு**—பறவைகளின் பெயர்கள்.
5. **பாம்பு, பல்லி**—பூச்சிகளின் பெயர்கள்.
6. **மரம், செடி**—தாவரங்களின் பெயர்கள்.
7. **பேனு, நாற்காலி**—பொருள்களின் பெயர்கள்.

இவை எல்லாம் பெயர்ச்சொற்கள்.

**மனப்பாடம் செய் :**

ஒரு பொருளின் பெயரே பெயர்ச்சொல்.

குறிப்பு :—இலக்கணத்தில் உயிர் உள்ளவை, உயிர் இல்லாதவை எல்லாம் **பொருள்கள்** என்றே வழங்கப்படும்.



## 21. சரோசினி தேவியார்

1. ஔவையாரைப் பற்றி நீ அறிவாய். அவ்வம்மையார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் நமது தமிழ் நாட்டில் தமிழ்ப் புலவராய் விளங்கினர். அவரைப் பற்றித் தமிழ் நாடு மட்டுமே **அறிந்திருந்தது**. ஆனால், இக்காலத்தில் தாய் மொழியல்லாத அயல் நாட்டு மொழியாகிய ஆங்கிலத்தில் புலமை பெற்று விளங்கியவர் **சரோசினி தேவியார்**. அவர் இயற்றிய ஆங்கிலக் கவிகளை ஆங்கிலேயரே படித்து ஆச்சரியமடைந்திருக்கின்றனர். ஆதலால், சரோசினி தேவியாருக்குக் **கவியரசியார்** என்னும் பட்டப் பெயர் வழங்குவதாயிற்று.

2. சரோசினி அம்மையார் தக்காணத்தில் உள்ள **ஐதராபாது** நகரில் பிறந்தார். அவர் தந்தையார் பெயர், **அகோரநாத சட்டோபாத்தியாயர்** என்பது. அன்னையார் பெயர், **வரதசுந்தரி** என்பது. அகோரநாதர், விஞ்ஞானக் கலையில் வல்லவர். அவர் **ஐதராபாது நிஜாம் கல்லூரியின்** தலைவராயிருந்தார்.

3. 'விளையும் பயிர் முளையிலே தெரியும்,' என்பது போல, சரோசினியம்மையார் இளமையிலேயே

கல்வியில் மிகுந்த ஊக்கம் காட்டி வந்தார். அவருக்கு ஆங்கில மொழியில் இருந்த விருப்பம் வேறு பாடங்களில் இல்லை; ஆதலால், இளமையிலேயே ஆங்கிலத்தில் நன்றாய்ப் பேசவும் எழுதவும் கற்றிருந்ததோடு, ஆங்கிலத்தில் கவி இயற்றுவதிலும் பயிற்சி பெற்றிருந்தார். அம்மையார் தமது பன்னிரண்டாம் வயதிலேயே '**மெற்றிக்குலேஷன்**' பரீட்சையில் சிறப்பாய்த் தேறினார்.

4. பின்னர் அவர் தந்தையார் அவரை உயர்தரக் கல்வி கற்க இங்கிலாந்து அனுப்பி வைத்தார். இங்கிலாந்து நமது நாட்டுக்குச் சுமார் ஆறாயிரம் மைல் தொலைவில் இருக்கிறது. இங்கிலாந்தின் தலை நகரமாகிய **இலண்டன்** நகரத்தில் உள்ள **அரசர் கல்லூரி**யில் அம்மையார் சேர்ந்தார்; அங்கும் மற்றப் பாடங்களைக்காட்டிலும் ஆங்கிலப் பாடத்திலேயே ஊக்கம் செலுத்தி வந்தார்; ஒழிந்த நேரத்தையெல்லாம் கவி இயற்றுவதிலேயே செலவிட்டு வந்தார். அங்கு அவர் இயற்றிய கவிகளின் சொல் அழகையும் பொருள் அழகையும் ஆங்கிலக் கவிஞர் சிலர் பாராட்டிப் புகழ்ந்தனர்.

5. தமது உயர்தரக் கல்வி முடிந்த பிறகு, அம்மையார் இந்தியாவுக்கு வந்தார்; இங்கு மாதர்களின் முன்னேற்றத்துக்காக உழைக்கத் தொடங்கினார். எத்தனையோ மாதர் சங்கங்களை ஏற்படுத்தினார்; மகாநாடுகள் கூட்டிப் பெண்களின் முன்னேற்றத்துக்கு உரிய வழிகளை விளக்கினார். அம்மையார் இந்திய மக்களிடையே காணப்படும் ஜாதி, மத வேற்றுமைகளை வெறுத்தார்; அவற்றை அடியோடு ஒழிக்க வேண்டும் என்று கூட்டங்களில் பேசினார்.

பிராமண வகுப்பைச் சேர்ந்த அம்மையார், நாயுடு வகுப்பைச் சேர்ந்த ஒருவரை மணம் செய்து கொண்டார்; இதன் மூலம் தமது சொல்லைச் செயலிற் காட்டினார்.

6. அக்காலத்தில் ஆங்கில ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவிக்கப் பெரியார் பலர் பாடு பட்டு வந்தனர். அவர்களுள் முதன்மை பெற்றவர் காந்தியடிகள். அப்போது அம்மையாரின் மனம் தாய் நாட்டுத் தொண்டில் திரும்பியது. அவர் காந்தியடிகளின் தலைமையில் விடுதலைக் கிளர்ச்சியில் ஈடு பட்டார்; நாடெங்கும் சுற்றிப் பிரசாரம் செய்தார். அம்மையாரின் ஆங்கிலப் பேச்சு மக்கள் மனத்தைக் கவர்ந்தது. இதனால் கிளர்ச்சி வளரலாயிற்று. அதன் பயனாக நாடு விடுதலை அடைந்தது.

7. விடுதலைக்குப் பிறகு காங்கிரஸ் கட்சியார் நாட்டை ஆளத் தொடங்கினர். அப்போது அவர்கள் அம்மையாரின் அரிய தேசத் தொண்டை மனத்திற்கொண்டு, அவரை **ஐக்கிய மாகாணத்தின் கவர்னராக** நியமித்தார்கள். தேவியார் அப்பதவியில் அமர்ந்து ஆட்சி புரிவதில் தமது திறமையை வெளிப்படுத்தினார். அவர் ஓயாமல் உழைத்தமையால், நாளுக்கு நாள் உடல் பலம் குன்றியது. அவர் சில நாட்கள் நோயுற்றிருந்து, 1949-ஆம் ஆண்டில் உயிர் நீங்கினார். அவரது உடல் மறைந்தது; ஆனால், புகழ் நிலை பெற்று நிற்கிறது. நமது நாட்டில் காங்கிரஸ் மகாசபையின் தலைமைப் பதவியையும், கவர்னர் பதவியையும் வகித்த முதல் பெண்மணி சரோசினி தேவியாரேயாவர்.

### அருஞ்சொற்பொருள்

*தக்காணம்–தட்சிண பீடபூமி, அன்னை – தாய், கலை–சாஸ்திரம், விஞ்ஞானம்–விசேட அறிவு, கல்லூரி–உயர் கலா*

சாலை, விருப்பம்-ஆசை, பயிற்சி-பழக்கம், ஊக்கம்-உற்சாகம், முயற்சி; பாராட்டி-பெருமைப்படுத்தி, விளக்கினார்-தெளிவாகக் கூறினார், தொண்டு-பணி, கிளர்ச்சி–ஆரவாரம், பதவி-உத்தி யோகம், குன்றியது-குறைந்தது, புகழ்-பெருமை, வகித்த–மேற் கொண்ட, பெற்றிருந்த.

**பயிற்சி:**

1. **விடை எழுது :—**

அ. சரோசினி அம்மையார் எங்கு, எப்போது பிறந்தார்?
ஆ. அவர் பெற்றோரின் பெயர்கள் யாவை?
இ. சரோசினியார் இளமையிலிருந்தே எதில் ஊக்கம் செலுத்தி வந்தார்?
ஈ. சரோசினி தேவியார் மாதர்க்குச் செய்த நன்மைகள் யாவை?
உ. சரோசினி தேவியார் நாட்டுக்குச் செய்த தொண்டு யாது?
ஊ. அவர் வகித்த பதவிகள் யாவை?
எ. சரோசினியாருக்குக் 'கவியரசி' என்னும் பெயர் வழங்கக் காரணம் என்ன?

2. **நட, வா, கொடு என்னும் வினைச்சொற்களுக்குக் கீழ் உள்ள மாதிரி**

**அட்டவணை தயார் செய் :—**

| பெயர் | இறந்த காலம் | நிகழ் காலம் | எதிர் காலம் |
|---|---|---|---|
| நான் | குதித்தேன் | குதிக்கிறேன் | குதிப்பேன் |
| நாம் | குதித்தோம் | குதிக்கிறோம் | குதிப்போம் |
| நீ | குதித்தாய் | குதிக்கிறாய் | குதிப்பாய் |
| நீங்கள் | குதித்தீர்கள் | குதிக்கிறீர்கள் | குதிப்பீர்கள் |
| அவன் | குதித்தான் | குதிக்கிறான் | குதிப்பான் |
| அவள் | குதித்தாள் | குதிக்கிறாள் | குதிப்பாள் |
| அவர்கள் | குதித்தார்கள் | குதிக்கிறார்கள் | குதிப்பார்கள் |
| அது | குதித்தது | குதிக்கிறது | குதிக்கும் |
| அவை | குதித்தன | குதிக்கின்றன | குதிக்கும் |

3. **இவற்றை அமைத்துச் சொந்த வாக்கியங்கள் எழுது:—**

விளங்கினார், ஆச்சரியம், தலைவர், ஊக்கம், விருப்பம், ஒழிந்த நேரம், கவிஞர், முன்னேற்றம்.



## 22. தென்னை வகை

1. படத்தில் தென்னை மரத்தின் உருவத்தைப் பார். அது ஐம்பது அறுபது அடி உயரம் வளரும். அதற்குக் கிளையும் இல்லை; இலையும் இல்லை. அதன் உச்சியில் **மட்டை**களும், அவற்றில் **ஓலை**களும் உண்டு. **பனை**, **ஈந்து**, **கமுகு** என்பவையும் தென்னை இனத்தைச் சேர்ந்தவைகளே. தென்னை, மணற்பாங்கான இடங்களில் நன்றாய் வளரும். அதற்கு உப்பங்காற்று மிகவும் நல்லது. பனையும், ஈந்தும் வரட்சி மிக்க இடங்களிலும் நன்கு வளர்ந்து பலன் தரும். ஆனால், கமுகு மரத்துக்கு மட்டும் தண்ணீர் அதிகம் வேண்டும். 'கை வரண்டால் கமுகு வரளும்,' என்பது பழமொழி.

2. தென்னை மிகவும் உபயோகமுள்ள மரங்களுள் ஒன்று. அதன் ஒவ்வொரு பாகமும் பயனுடையது. அடி மரத்தை வாரைகளாக அறுத்து வீடு கட்டலாம்; ஓலையைக் கீற்றாக முடைந்து கூரை

வேயலாம்; மட்டையை உலர வைத்து அடுப்பெரிக்கலாம்; ஓலையில் உள்ள ஈர்க்கைத் துடைப்பமாக உபயோகிக்கலாம்.



3. தென்னை மரத்துக்குத் தெங்கு என்பது வேறு பெயர். தென்னையின் காயைத் **தேங்காய்** என்கிறோம். முதிராத தேங்காய் **இளநீர்** எனப்படும். இதன் நீர் மிகவும் உருசியாய் இருக்கும். முற்றிய காயினுள் வெண்மையான பருப்பு இருக்கும். இது கறி சமைக்கவும் தின்பண்டங்கள் செய்யவும் உதவும். நன்றாய் முதிர்ந்த பருப்புக் **கொப்பரை** எனப்படும். கொப்பரையிலிருந்து **தேங்காய் நெய்** எடுக்கப்படுகிறது. அது தின்பண்டம் செய்யவும், தலைக்குத் தடவவும், விளக்கெரிக்கவும், சோப்புச் செய்யவும் உதவுகிறது. நன்றாய் உலர்ந்த தேங்காய்க்கு **நெற்று** என்பது பெயர். இதை உரித்து, மட்டையைச் சேற்றில் புதைத்து ஊறவைத்து நார் எடுப்பர். இந்த நாரினால் கயிறு, பிரஷ், மிதிபாய் முதலிய பல பொருள்கள் செய்யப்படுகின்றன.

தென்னம்பாளையைச்சீவி, கலயம் கட்டிச் சாறு இறக்கி வெல்லம் காய்ச்சப்படுகிறது. தென்னை மிகுதியாய் வளரும் இடங்களில் கீற்று முடைதல், கயிறு திரித்தல், நெய் ஆடல், வெல்லம் காய்ச்சுதல் ஆகிய குடிசைத் தொழில்கள் நடைபெறுகின்றன.

4. பனை மரமும் தென்னையைப் போல நமக்குப் பல வகைகளிற் பயன்படுகிறது. பனை மரம் வயிரம் உடையது. ஆதலால், அதை வாரைகளாக அறுத்து வீடு கட்ட உபயோகிக்கலாம். பனை ஓலையால் கூரை வேயலாம். பனை மட்டையைக் கிழித்து, நார் எடுத்துக் கயிறு திரிக்கலாம். பனம்பழத்தைக் கிராமத்தவர் உண்பர். முதிராத பனங்காயின் உள்ளீட்டுக்கு '**நுங்கு**' என்பது பெயர். இது தின்பதற்கு உருசியாயிருக்கும். பனங்கொட்டையைப் பூமியில் நட்டால், கிழங்கு தோன்றும். இதையும் மக்கள் தின்பதுண்டு. பனஞ்சாற்றால் வெல்லம் செய்யப்படுகிறது.

5. ஈந்து, **பேரீந்து**, **சிற்றீந்து** என இரு வகைப்படும். நமது நாட்டிற் காணப்படுவது சிற்றீந்தே. **சஹாரா** முதலிய வெப்பப் பாலைகளில் உள்ளது பேரீந்து. சிற்றீந்து சாறு இறக்க உதவும். இதன் பழங்கள் தின்ன உதவும். இதன் மரமும் மட்டைகளும் அடுப்பெரிக்க உதவும். பேரீந்தின் பழம் மிகவும் உருசியாயிருக்கும். அது பாலை வன வாசிகளின் முக்கிய உணவுப் பொருள்.

6. '**கமுகு**' என்பது பாக்கு மரம். இதிலிருந்து நமக்குப் பாக்குக் கிடைக்கிறது.

### அருஞ்சொற்பொருள் :

இனம்-சாதி, கலயம்-குடுவை, பயன்–உபயோகம், வயிரம்–கெட்டியான பகுதி, உள்ளீடு–உள்ளே இருக்கும் பொருள், பாலை வனம்- மரம் செடி கொடிகள் வளராத நிலம்.

### பயிற்சி :

1 **விடை எழுது :—**

அ. தென்னை எங்கு நன்றாகப் பயிராகும்?
ஆ. தென்னை இனத்தைச் சேர்ந்த மற்ற மரங்கள் எவை?
இ. தென்னையின் பயன்களில் நான்கு கூறு.
ஈ. பனைமரம் எங்குப் பயிராகும்?
உ. பனைமரத்தின் பயன்கள் யாவை?
ஊ. ஈந்து எத்தனை வகைப்படும்? அவை எவை?
எ. பேரீந்து எங்குப் பயிராகும்? அது யாருக்குப் பெரிதும் பயன்படுகிறது?

2. **வாக்கியங்களில் தடித்த எழுத்தில் உள்ள சொற்களுக்குப் பதில், கீழ்வருவனவற்றிலிருந்து தக்க பதங்களை அமை :—**

முற்றிய–பூசவும்–சௌகாரம்–உஷ்ணம் – தின்பண்டம் – தெங்கு–பயனுள்ளது.

அ. தென்னையின் ஒவ்வொரு பாகமும் **உபயோகமுள்ளது.**
ஆ. **தென்னை** மணற்பாங்கான இடங்களில் நன்றாய் வளரும்.
இ. **முதிர்ந்த** காயினுள் வெண்மையான பருப்பு இருக்கும்.
ஈ. தேங்காய் நெய் **பட்சணம்** செய்யவும், தலைக்குத்**தடவ**வும், **சோப்புச்** செய்யவும் உதவும்.
உ. சஹாராவில் **வெப்பம்** அதிகம்.

3. **இதைத் தெரிந்துகொள் :—**

லகர–ளகர வேற்றுமை.:

அவல்–ஒரு தின்பண்டம்.
அவள்–பெண்ணைக் குறிக்கும் சொல்

ஆல்—ஆலமரம்.
ஆள்—வேலை செய்யும் ஆள்.

இலை—மரம் செடி முதலியவற்றின் இலை.
இளை-மெலிந்து போ.

ஒலி—சத்தம்.
ஒளி—பிரகாசம்.

**4. மேலே கொடுக்கப்பட்டுள்ள சொற்களைச் சொந்த வாக்கியங்களில் அமை :**

**5. எதற்கு எது பொருந்தும் ?**

| | | |
|---|---|---|
| அ. | பனை, ஈந்து, கமுகு | வயிரம் உடையது. |
| ஆ. | தென்னை | பாக்கு மரம். |
| இ. | கமுகு மரத்துக்கு | பாலை நிலத்தில் வளரும். |
| ஈ. | தென்னை ஓலையை | உள்ளீட்டுக்கு நுங்கு என்பது பெயர். |
| உ. | தெங்கு என்பது | கிழங்கு தோன்றும். |
| ஊ. | பனைமரம் | உடலுக்கு நல்லது. |
| எ. | கமுகு என்பது | தென்னையின் வேறு பெயர். |
| ஏ. | பேரீந்து | கீற்றாக முடையலாம். |
| ஐ. | பனங்காயின் | தண்ணீர் அதிகம் வேண்டும். |
| ஒ. | பனங்கொட்டையிலிருந்து | மணற்பாங்கான இடங்களில் வளரும். |
| ஓ. | பனைவெல்லம் | தென்னை இனத்தைச் சேர்ந்தவை. |



# 23. பனைமரம்

(பாட்டு)

பனைமரமே, பனைமரமே,
ஏன்வளர்ந்தாய்? பனைமரமே!
நான்வளர்ந்த காரியத்தை
நாட்டாரே! சொல்லுகிறேன்: 1

படுக்கப்பாய் நானாவேன்;
பாய்முடையத் தோப்பாவேன்;
வீடுகட்ட வாரையாவேன்;
மேல்பரப்ப ஓலையாவேன். 2

கட்டநல்ல கயிறாவேன்;
கன்றுகட்டத் தும்பாவேன்;
வெட்டநல்ல விறகாவேன்;
விசிறிகட்டக் குருத்தாவேன். 3

சித்திரைக் கோடையிலே
சிறந்தநல்ல நுங்காவேன்;
பசித்துவரு வோர்தமக்குப்
பனம்பழமும் நானாவேன். 4

நனைந்துவரு வோர்களுக்கு
நல்லசம்பங் குடையாவேன்;
உடல்களைத்து வருவோர்க்கு
உயர்பதநீர் நானாவேன்! 5

—பழம்பாட்டு



# 24. பஞ்சாயத்துச் சபை

1. நமது நாட்டில் பட்டணங்களைக்காட்டிலும் கிராமங்களே அதிகம். ஆதலால், கிராமவாசிகளின் தொகை, பட்டணவாசிகளின் தொகையைக்காட்டிலும் மிகுதியாய் இருக்கிறது. ஒவ்வொரு கிராமத்துக்கும் பல தேவைகள் உண்டு. தெருக்களைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்; கழிவு நீர், தெருக்களில் தேங்காமல் அகற்றப்படல் வேண்டும்; இரவில் தெருக்களில் விளக்குகள் எரிய வேண்டும்; மக்களுக்குத் தூய குடிநீர் வேண்டும்; சத்திரம், சந்தைத் தோப்பு, வண்டி மேடு முதலிய பொது இடங்களைப் பாதுகாக்க வேண்டும். இத்தேவைகளைக் கவனிக்கச் சிலர் வேண்டும் அல்லவா?

2. முற்காலத்தில் இத்தேவைகளைக் கவனிக்க ஊரார் தம்முள் ஐவரைத் தேர்ந்தெடுப்பது வழக்கம்.

இந்த ஐவர் சபைக்குப் 'பஞ்சாயத்து' என்பது பெயர். அவ்வழக்கத்தைப் பின்பற்றியே இக்காலத்திலும் பெரிய கிராமங்களில் பஞ்சாயத்துக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆனால், ஊரின் மக்கள் தொகைக்குத் தக்கபடி சபையினர் தொகை நிருணயிக்கப்படும். இக்காலத்திலும் இச்சபைக்கு அங்கத்தினர்கள் குடிமக்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள், தங்களுள் தலைவர் ஒருவரையும், துணைத் தலைவர் ஒருவரையும் தேர்ந்தெடுப்பார்கள். அத்தலைவர் தலைமையில் பஞ்சாயத்துச் சபை கூடி, ஊருக்குச் செய்ய வேண்டிய நன்மைகளைப் பற்றிப் பேசி முடிவு செய்வது வழக்கம். இம்முடிவுகளை நிறைவேற்ற அரசாங்கத்தார் உத்தியோகஸ்தர் ஒருவரை நியமிக்கின்றனர். அவர் உத்தரவுக்கடங்கிய அலுவலகம் ஒன்று உண்டு. அதில் வேலை செய்யும் அலுவலர்க்கும், அலுவலர் தலைவர்க்கும் சம்பளம் உண்டு. ஆனால், பஞ்சாயத்தார்க்கும், அவர்கள் தலைவர்க்கும் சம்பளம் இல்லை.

3. பஞ்சாயத்துச் சபை செய்யும் முடிவுகளை நடைமுறையில் கொண்டுவரப் பணம் வேண்டுமல்லவா? இப்பணம் எங்கிருந்து கிடைக்கிறது? இதற்காகக் கிராமத்தார் பல வரிகளைச் செலுத்துகின்றனர். வீட்டு வரி, விளக்கு வரி, தொழில் வரி, வண்டி வரி என்பவை அவற்றுள் முக்கியமானவை. இவையன்றி, வண்டி மேடு, சந்தைத் தோப்பு முதலிய பொதுவிடங்களில் வரி வசூலிக்கும் உரிமை குத்தகைக்கு விடப்படும். இக்குத்தகைப் பணமும் சபைக்குக் கிடைக்கும். ஆண்டுதோறும் அரசாங்-

கத்தாரும் பஞ்சாயத்துச் சபைக்குப் பணம் கொடுத்து உதவுகின்றனர்.

4. இவ்வாறு வசூலிக்கப்படும் பணத்தைக்கொண்டே கிராமப் பொதுக் காரியங்கள் நடைபெறுகின்றன. சில பெரிய கிராமங்களில் உள்ள பஞ்சாயத்துச் சபைகள், பள்ளிகளை வைத்து நடத்துகின்றன; மருத்துவச் சாலைகளை ஏற்படுத்திக் கிராமச் சுகாதாரத்தைக் கவனிக்கின்றன; படிப்பகம், நூலகம் முதலியவற்றையும் ஏற்படுத்துகின்றன.

5. பஞ்சாயத்துச் சபை ஊரை ஆள்கின்றது. ஆதலால், இதற்கு '**ஊராண்மைக் கழகம்**' என்னும் பெயரும் வழங்கி வருகிறது. ஆங்கிலத்தில் இது '**பஞ்சாயத்துப் போர்டு**' என்று வழங்கப்படுகிறது. பஞ்சாயத்துச் சபைக்கு அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பதில் கிராம மக்கள் சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும்: தமது நன்மையைக் கருதாமல் பொது நன்மையைக் கவனிக்கும் நற்குணம் படைத்தவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். கட்சிப் பற்றுக் காரணமாகவும், ஜாதி மதம் உறவு காரணமாகவும், தகுதி இல்லாதவர்களைத் தேர்ந்தெடுத்தல் கூடாது.

6. சில பெரிய கிராமங்களில் **கிராமப் பஞ்சாயத்துக் கோர்ட்டும்** உண்டு. இதற்குத் தேர்தல் இல்லை. கிராமத்தவருள் தகுதி வாய்ந்தவரை இதற்கு அரசாங்கத்தாரே நியமிக்கின்றனர். அவர்கள் கிராமத்தில் நிகழும் சிறு சண்டை

சச்சரவுகள், கொடுக்கல் வாங்கல் வழக்குகள் முதலி-யவற்றை விசாரித்துத் தீர்ப்புக் கூறுவார்கள். அவர்களுக்கும் சம்பளம் இல்லை. எனவே, கிராமப் பஞ்சாயத்துப் போர்டு வேறு; கிராமப் பஞ்சாயத்-துக் கோர்ட்டு வேறு என்பதை அறிதல் அவசியம்.

### அருஞ்சொற்பொருள் :

பட்டண வாசிகள்–பட்டணத்தில்வசிப்பவர்கள், கழிவுநீர்–அசுத்த நீர், சாக்கடைநீர்; அகற்றல்-அப்புறப்படுத்தல், தூய–சுத்தமான, நிருணயிக்கப்படும்-நிச்சயிக்கப்படும், நிறைவேற்ற–நடைமுறையில் கொண்டுவர, அலுவலகம்–உத்தியோகம் செய்யும் இடம், அலுவலர்–உத்தியோகஸ்தர், காரியஸ்தர், வேலை பார்ப்பவர்; வசூலிக்கப்படும்-தண்டல் செய்யப்படும், ஆண்டு தோறும்-ஒவ்வொரு வருஷமும்.

### பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. முற்காலத்தில் கிராமங்கள் எவ்வாறு ஆளப்பட்டு வந்தன?

ஆ. பஞ்சாயத்துச் சபையாரின் வேலைகள் யாவை?

இ. பஞ்சாயத்தார் செய்யும் முடிவுகளை நிறைவேற்றுப-வர் யார்?

ஈ. பஞ்சாயத்துச் சபைக்கு எவ்வழிகளில் பணம் கிடைக்-கிறது?

உ. பஞ்சாயத்துச் சபைக்கு அங்கத்தினரைத் தேர்ந்-தெடுப்பதில் நாம் கவனிக்க வேண்டுவது யாது?

ஊ. பஞ்சாயத்துப் போர்டுக்கும், பஞ்சாயத்துக் கோர்ட்-டுக்கும் உள்ள வேறுபாடுகள் என்ன?

2. அட்டவணையைப் பூர்த்தி செய் :—

| பெயர் | இறந்தகாலவினை | நிகழ்காலவினை | எதிர் காலவினை |
|---|---|---|---|
| நான் | சாப்பிட்டேன் | சாப்பிடுகிறேன் | சாப்பிடுவேன் |
| நாங்கள் | சாப்பிட்டோம் | சாப்பிடு கிறோம் | சாப்பிடுவோம் |
| நீ | | | |
| நீங்கள் | | | |
| அவன் | | | |
| அவள் | | | |
| அவர்கள் | | | |
| அது | | | |
| அவை | | | |

3. சிதைந்துள்ள சொற்களை ஒழுங்குபட எழுது :—

அ. இதுசாப் பாடுபோ டப்படு மிடம்.

ஆ. சாலையைஅ சுத்தம்செய் பவர்தண்டனைக் குள்ளா வார்கள்.

இ. உண்மையேபே சியஉத் தமர்காந் தியடிகள்.

4. எதிர்ச்சொற்கள் எழுது :—

மிகுதி × பகைவன் ×
நன்மை × துவக்கம் ×

5. இவற்றைத் தெரிந்துகொள் :—

| இப்படிச் சொல்லாதே. | இப்படிச் சொல். |
|---|---|
| சிகப்பு, செழுப்பு | சிவப்பு |
| தின்னு | தின் |
| தேர்த்தம், தூத்தம் | தீர்த்தம் |
| புண்ணாக்கு | பிண்ணாக்கு |
| வத்தல் | வற்றல் |
| எளநீர் | இளநீர் |
| ஆனை | யானை |

## 25. பேசும் பறவைகளும் பாடும் பறவைகளும்

1. பறக்கும் தன்மையுள்ளது பறவை. பறவைகள் பல வகைப்படும். நாம் கற்றுக்கொடுக்கும் சொல்லைத் திருப்பிச் சொல்லும் சில பறவைகள். **கிளியும் மைனாவும்** அத்தன்மையுடையவை. ஆதலால், அவற்றை நாம் '**பேசும் பறவைகள்**' என்கிறோம். சில பறவைகளுக்கு இனிய குரல் உண்டு. **குயிலும், வானம் பாடியும்** கூவுவது இனிமையாய் இருக்கும். இவற்றைப் '**பாடும் பறவைகள்**' என்கிறோம்.

2. கிளி மிகவும் அழகிய பறவை. **பச்சைக்கிளி, வெள்ளைக் கிளி, சிவப்புக் கிளி, பஞ்சவண்ணக் கிளி** எனக் கிளிகள் பல வகைப்படும். நமது நாட்டில் எங்கும் காணப்படுவது பச்சைக்கிளியே. **பச்சை, சிவப்பு, மஞ்சள், நீலம், வெண்மை** ஆகிய ஐந்து நிறங்களையும் பஞ்சவண்-

ணக் கிளியின் இறகுகளிற் காணலாம். வெள்ளைக்-கிளியின் இறகுகள் வெண்மையாய் இருக்கும். அதன் அலகும், கால்களும் கறுப்பாயிருக்கும். வெள்ளைக் கிளியின் தலையில் கொண்டையும் உண்டு. பச்சைக் கிளியின் இறகு பசுமையாயிருக்கும். அதன் கழுத்தில் கருமை நிறமுள்ள மெல்லிய கோடு உண்டு. பச்சைக்கிளியின் அலகு சிவப்பாயிருக்கும். அது மிகவும் உறுதியானது. கிளி தனது அலகி-னால் பழங்களைக் கொத்தியும், கொட்டைகளைக் கடித்தும் தின்னும். கிளி பழங்களையும், விதை-களையும் தின்று வாழும்.

3. கிளிகள் காடுகளில் கூட்டங்கூட்டமாய் வசிக்கும்; கிராமங்களிலும் பட்டணங்களிலும் உள்ள ஆலமரம் போன்ற பெரிய மரங்களின் பொந்துகளில் வாழும். அவை பெரும்பாலும் மரப் பொந்துகளிலேயே முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும்.

4. கிளி சிறிய குஞ்சாய் இருக்கும் பொழுதே மக்கள் அதை எடுத்துக் கூட்டில் வைத்து வளர்ப்-பார்கள்; அப்போது அதைப் பேசப் பழக்குவார்-கள். அது அவர்கள் சொல்லிக் கொடுக்கும் சொல்லை அப்படியே சொல்லும். ஆனால், கற்றுத்-தரப்பட்ட சொல்லைத் தவிர, வேறு ஒரு சொல்லும் அது தானே சொல்லாது. இதனாலேதான், 'சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை,' என்னும் முதுமொழி வழங்கி வருகிறது.

5. கிளியைப்போலச் சொன்னதைச் சொல்-லும் திறம் பெற்றது **மைனா** என்னும் பறவை. '**நாகணவாய்ப் புள்**' என்பது மைனாவுக்கு வழங்கி

வரும் மற்றொரு பெயர். இது கிளியைக்காட்டிலும் உருவத்திற்சிறியது. இது இருண்ட பழுப்பு நிறம் உள்ளது. இதன் தலையிலும், முதுகிலும், சிறகு-களிலும் கருமையான இறகுகள் காணப்படும். இதன் வயிற்றுப்புறம் வெண்மையாயிருக்கும். இதன் கால், அலகு, வாய் மூன்றும் மஞ்சள் நிறமா-யிருக்கும்.

6. மைனு, புல் தரையில் உள்ள புழு, பூச்சி, வெட்டுக்கிளி முதலியவற்றைத் தின்று வாழும்; மரங்களில் கூடு கட்டி, முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும். மக்கள் இதையும் சிறு குஞ்சாய் இருக்கும் போதே பிடித்துக் கூட்டில் வைத்துப் பேசப் பழக்குவார்கள். இது கிளியைக்காட்டிலும் தெளிவாகப் பேசும்.

7. குயில் காகத்தைப் போலக் கருமையாய் இருக்கும். ஆனல், அது உருவத்தில் காகத்தைக்-காட்டிலும் சிறியது. குயிலின் கண்கள் வட்டமா-யும் சிவப்பாயுமிருக்கும். ஆண் குயில் கருமையா-யிருக்கும். பெண் குயில் வெண்புள்ளிகள் நிறைந்த கருமை நிறம் உடையது.

8. குயிலுக்கு அச்சம் அதிகம். அது இலை அடர்ந்த மரங்களில் வசிக்கும். அதைப் பெரும்-பாலும் மாந்தோப்புக்களில் காணலாம். அது கூவி நிறுத்தியவுடனே, நாம் அதைப்போலவே கூவினல், அது பதிலுக்குக் கூவும். நாம் எத்தனை முறை கூவினலும், அதுவும் அத்தனை முறை கூவும். அது கேட்பதற்கு மிகவும் இனிமையாயிருக்கும்.

9. குயிலுக்குக் கூடு கட்டத் தெரியாது. ஆத-லால், பெண்குயில், காகங்களின் கூட்டைத் தேடி

அதில் முட்டையிடும். பெண் குயிலுக்கு அடை காக்கும் வழக்கமும் இல்லை. காகத்தின் கூடு கிடையாவிட்டால், கரிக்குருவி போன்ற வேறு கருமை நிறப் பறவைகளின் கூட்டில் முட்டையிடும். அது ஏன் தெரியுமா? முட்டையிலிருந்து வெளி–வரும் குஞ்சு கருமையாய் இருக்குமாதலால், கறுப்பு நிறப் பறவைகள் அவற்றைத் தம் குஞ்சுகள் என்று எண்ணிப் பாதுகாப்பதற்கே.

10. **வானம்பாடியின்** குரலும் கேட்பதற்கு மிகவும் இனிமையாயிருக்கும். அது உருவத்தில் குயிலைக்காட்டிலும் சிறியது. வானம்பாடி பெரும்–பாலும் வயல்களின் இடையில் கூடு கட்டிக்கொண்டு வாழும்; வயல்களில் பயிர் இல்லாவிடில், புதர்களில் வாழும். வானம்பாடிகள் பல சேர்ந்து கூவுவது, கேட்டு மகிழத் தக்கது.

**அருஞ்சொற்பொருள்:**

வண்ணம்-நிறம், பசுமை–பச்சை நிறம், திறம்–ஆற்றல், சாமர்த்தியம்; புள்–பறவை, தெளிவு-விளக்கம், அச்சம்–பயம், தோப்பு–தோட்டம், அடைகாத்தல்–பறவைகள் தம் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிப்படும் வரையில் அம் முட்டைகளைத் தம் வயிற்றின்கீழ் வைத்துக் காத்தல், பாது காத்தல்-காப்பாற்றுதல்.

**பயிற்சி:**

1. **விடை எழுது:—**

அ. பேசும் பறவைகள் எவை?

ஆ. பாடும் பறவைகள் எவை?

இ. எத்தனை வகைக் கிளிகளை நீ பார்த்திருக்கிறாய்?

ஈ. 'பஞ்சவண்ணம்' என்பவை எவை?

உ. கிளியை மக்கள் எவ்வாறு பேசப் பழக்குகிறார்கள்?

ஊ. நாகணவாய்ப் புள் என்பது எது? அதை மக்கள் என்ன செய்கிறார்கள்?

2. **கீழ் வரும் இரண்டிரண்டு வாக்கியங்களை ஒவ்வொரு வாக்கியமாக எழுது :—**

அ. 1. பச்சைக் கிளிகள் காட்டில் வாழும்.
2. அவை கூட்டம் கூட்டமாக வாழும்.

ஆ. 1. மரங்களில் பொந்துகள் இருக்கும்.
2. அவற்றில் கிளிகள் வாழும்.

இ. 1. மைனு மரங்களில் கூடு கட்டும்.
2. அவற்றில் முட்டையிடும்.

ஈ. 1. குயிலின் கண்கள் வட்டமாயிருக்கும்.
2. அவை சிவப்பாயிருக்கும்.

**இலக்கணம் :**

**பெயர்ச்சொல்—திணை : உயர்திணை**

**இவற்றைப் படி :—**

அ. **முருகன்** மலை நாட்டுத் **தெய்வம்.**
**கலைமகள் கல்விக் கடவுள்.**

முருகன், தெய்வம், கலைமகள், கல்விக்கடவுள் என்பன **தேவரைக் குறிக்கும்** பெயர்கள்.

ஆ. **நேரு** நம் நாட்டுப் **பிரதமர்.**
**தமிழரசி** ஒரு பள்ளிச் **சிறுமி.**

நேரு, பிரதமர், தமிழரசி, சிறுமி என்பன **மக்களைக் குறிக்கும்** பெயர்கள். இவை உயர்ந்த இனப் பொருள்களைக் குறிக்கும் பெயர்கள். ஆதலால், **உயர்திணைப் பெயர்கள்** எனப்படும்,

**மனப்பாடம் செய் :**

**தேவரையும், மக்களையும்** குறிக்கும் பெயர்கள் **உயர்திணைப் பெயர்களாம்.**



## 26. நம் நாட்டுத் தந்தையார்

1. நமது நாடு இப்போது சுதந்தர நாடா-யிருக்கிறது. இச்சுதந்தரம் நம் நாட்டுப் பெரியார் பலரின் இடைவிடா உழைப்பால் நமக்குக் கிடைத்-தது. அவ்வாறு உழைத்த பெரியார்களுள் மிகவும் சிறந்தவர் **காந்தியடிகள்**. இவரது முழுப் பெயர் **மோகனதாஸ் கரம்சந்து காந்தி** என்பது. இவர் **பம்பாய்** இராச்சியத்தில் உள்ள **போர்பந்தர்** என்னும் ஊரில், 1869–ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், 2–ஆம் நாள் பிறந்தார். இவர் பிறந்த நாளைக் கொண்டாடவே ஆண்டுதோறும் அக்டோ-பர்த் திங்கள் 2–ஆம் நாள் நமக்கு விடுமுறை தரப்-படுகிறது.

2. காந்தியடிகளின் தந்தையார், சிறந்த ஒழுக்கம் உள்ளவர்; தாயார், ஒழுக்கத்தோடு

கடவுள் பத்தியும் மிகுந்தவர். ஆகையால், இளமையிலேயே காந்தியடிகள் ஒழுக்கமும் கடவுள் பத்தியும் பெற்று விளங்கினர். அவர் எந்தக் காரணத்தாலும் பொய் பேசவே மாட்டார். தந்தையாருக்குப் பணிவிடை செய்வதிலும், தாயார் இட்ட கட்டளையை நிறைவேற்றுவதிலும் அவருக்கு விருப்பம் அதிகம்.

3. காந்தியடிகள் இந்தியாவில் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த பின் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார். அங்கு அவர் சட்டம் கற்றுப் பாரிஸ்டர் பரீட்சையில் தேறி, இந்தியாவுக்குத் திரும்பினர். சிறிது காலத்தில் அவர் தமது தொழில் சம்பந்தமாகத் தென்னப்பிரிக்காவுக்குச் சென்றார். அங்கு வாழ்ந்து வந்த இந்தியர், அக்காலத்தில் வெள்ளையரால் மிகவும் கொடுமையாய் நடத்தப்பட்டனர். அதைக் கண்ட காந்தியடிகளின் மனம் புண்பட்டது. எப்படியாவது அக்கொடுமையை ஒழிக்கவேண்டும் என்று அவர் எண்ணினர்; துப்பாக்கியின் பலம் பெற்றிருந்த வெள்ளையரை எதிர்த்துச் சண்டை செய்ய முடியாது என்பதை அறிந்தார்; ஆகையால், கத்தி துப்பாக்கி முதலியவை உபயோகிக்கப்படாத ஒரு புதிய போர் முறையைக் கையாண்டார். அதுவே '**சத்தியாக்கிரகம்**' என்பது. இந்த முறைப்படி எதிரிகள் வைதால், பதில் பேசாமல் கேட்டுக்கொள்ள வேண்டும்; எதிரிகள் அடித்தால், பதிலுக்கு அடிக்காமல் பட்டுக்கொள்ள வேண்டும்; சிறைக்கு அனுப்பினல், மகிழ்ச்சியுடன் செல்ல வேண்டும்.

4. தென்னப்பிரிக்காவில் காந்தியடிகள் கையாண்ட சத்தியாக்கிரக முறையால் அவருக்கு

வெற்றி கிடைத்தது. அங்கு வாழ்ந்து வந்த இந்திய மக்களின் துயரம் ஒருவாறு நீங்கிற்று. அதன் பிறகு காந்தியடிகள் இந்தியாவுக்குத் திரும்பினர்.

5. அவர் இந்தியாவை அடைந்தபோது இந்தியர் தமது நாட்டு விடுதலைக்காக வெள்ளையரை எதிர்த்துப் போராடிக்கொண்டிருந்தனர். காந்தியடிகள், தமது தாய் நாட்டின் நிலையைக் கண்டு, தாமும் விடுதலைப்போரில் இறங்கினர்; தாம் ஆப்பிரிக்காவில் கையாண்ட அதே முறையில் போர் நடத்தி, நாட்டுக்கு விடுதலை வாங்கித் தந்தார்.

6. இதுவன்றிக் காந்தியடிகள் இந்திய மக்களுக்குச் செய்த நன்மைகள் பல உண்டு. நமது நாட்டு மக்கள் ஒற்றுமை இல்லாதிருப்பதற்குக் காரணம், ஜாதிக் கட்டுப்பாடுகளே என்பதை அவர் அறிந்தார்; ஆதலால், **தீண்டாமை** என்னும் தீய வழக்கத்தை அடியோடு ஒழிக்க முயன்றார். அதன் பயனாக இப்போது நம்மிடையே ஜாதி வேற்றுமை நீங்கி வருகிறது.

7. நமது நாட்டு மக்கள் வறுமையால் தொல்லை அடைவதன் காரணத்தை அவர் ஆராய்ந்தார். நமது நாட்டில் விவசாயிகளின் தொகை அதிகம். ஆனால், அவர்களுக்குப் போதுமான வருமானம் கிடைப்பதில்லை. இந்தக் குறையை நீக்குவதற்காகக் **குடிசைத் தொழில்கள்** ஒவ்வொரு கிராமத்திலும் நடைபெறவேண்டும் என்று நிச்சயித்தார். இத்தொழில்களின் வளர்ச்சிக்கு வேண்டிய அனைத்தையும் அரசாங்கத்தார் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தினர். நமது நாட்டின் முக்கியக் கைத்தொழிலாகிய **நெசவுத் தொழில்** அழிந்துவிட்டதை அவர் அறிந்-

தார். ஆதலால், கதிரிலும், ராட்டையிலும் நூல் நூற்று, அந்த நூலைக்கொண்டு கைத்தறியில் நெசவு நடைபெற வேண்டும் என்று வற்புறுத்தினர். அதன்படி பலர் செய்து வருகின்றனர்.

8. காந்தியடிகள் மதுபானத்தின் கொடுமைகளையறிந்து, **மது விலக்குத் திட்டத்தை** நடைமுறையில் கொண்டுவர விரும்பினர். அதன்படியே நமது சென்னை இராச்சியத்தில் மது விலக்கு நடைமுறையில் கொண்டுவரப்பட்டது. இவ்வாறு காந்தியடிகள் தம் தாய் நாட்டு மக்களின் முன்னேற்றத்துக்காக இரவும் பகலும் உழைத்தார். இவற்றையெல்லாம் உலகத்தவர் அறிந்து, காந்தியடிகளை **மகாத்துமா** என்று வழங்கத் தொடங்கினர். அவர் காலத்தில் அவர் '**உலகப் பெரியார்**' என்று மதிக்கப்பட்டனர்; மகாத்துமா என்று புகழப்பட்டனர்.

9. காந்தியடிகள் சிறுவர் சிறுமியர்க்குக் கூறியுள்ள நல்லுரைகள் எண்ணற்றவை. அவற்றுள் சிலவற்றை நீங்கள் தெரிந்துகொண்டு அவற்றின்படி நடப்பது மிகவும் நல்லது:

1. **எக்காலத்திலும் எவரிடத்திலும் எக்காரணம் பற்றியும் பொய் பேசக்கூடாது.**
2. **மக்கள் எல்லாரும் சமம். உயர்வு தாழ்வு மக்களிடையே இருத்தல் கூடாது.**
3. **பிறர் மனம் நோகும்படி எதையும் செய்யக்கூடாது; எதையும் பேசக்கூடாது.**
4. **ஒவ்வொருவரும் கடவுள் பத்தி உடையவராயிருக்க வேண்டும். கடவுளிடம் அன்பில்லாதவர், பிறரிடம் அன்பு காட்ட முடியாது.**
5. **அனைவரும் தாய் நாட்டுப் பற்றும், தாய் மொழிப் பற்றும் உடையவராயிருத்தல் வேண்டும்.**

## அருஞ்சொற்பொருள் :

சுதந்தரம்—தன்னுரிமை, ஒழுக்கம்—நடத்தை, பணிவிடை—குற்றேவல், வேலை; கட்டளை—உத்தரவு, புண்பட்டது—வருந்தியது, கொடுமை—துன்பம், ஒழிக்க—நீக்க, கையாண்டார்—மேற்கொண்டார், துயரம் – துக்கம், வேற்றுமை – வித்தியாசம், தொல்லை—துன்பம், நிச்சயித்தார்—தீர்மானித்தார், வற்புறுத்தினார்—கட்டாயப்படுத்தினார், நடைமுறை—வழக்கம், எண்ணற்றவை – கணக்கில்லாதவை, சமம்—ஈடு, வித்தியாசமில்லாமை; பற்று—அபிமானம், ஈடுபாடு.

## பயிற்சி :

1. விடை எழுது :—

அ. காந்தியடிகள் எங்கே, எப்போது பிறந்தார் ?

ஆ. காந்தியடிகளிடம் இளமையிலேயே காணப்பட்ட நற்குணங்கள் எவை ?

இ. தென்னாப்பிரிக்காவில் காந்தியடிகள் செய்தது யாது?

ஈ. இந்திய விடுதலைப் போரில் காந்தியடிகள் கையாண்ட முறை யாது ? அதற்கு வழங்கிய பெயர் என்ன ?

உ. காந்தியடிகள் நமது நாட்டுக்குச் செய்த நன்மைகள் யாவை ?

ஊ. காந்தியடிகள் இளைஞர்க்குக் கூறியுள்ள நல்லுரைகள் எவை ?

2. அட்டவணையைப் பூர்த்தி செய் :—

| வினை | இறந்த காலம் | நிகழ் காலம் | எதிர் காலம் |
|---|---|---|---|
| உண் | உண்டேன் | உண்கின்றேன் | உண்பேன் |
| குடி | | | |
| படி | | | |
| பாடு | | | |
| ஆடு | | | |
| ஓடு | | | |
| இரு | | | |
| தாங்கு | | | |
| எழுது | | | |
| காண் | | | |

### இலக்கணம் :

### பெயர்ச்சொல்—திணை: அஃறிணை

| | |
|---|---|
| **எருது**—விலங்கின் பெயர்.<br>**மயில்**—பறவையின் பெயர்.<br>**மீன்**—நீர் வாழும் உயிரின் பெயர்.<br>**பாம்பு**—ஊரும் உயிரின் பெயர்.<br>**மரம்**—தாவரத்தின் பெயர். | இவை உயிர் உள்ள பொருள்களின் பெயர்கள். |
| **பட்டணம்**—இடத்தின் பெயர்.<br>**திங்கள்**—நாளின் பெயர்.<br>**காவிரி**—யாற்றின் பெயர்.<br>**நாற்காலி**—ஒரு பொருளின் பெயர்.<br>**கல்**—ஒரு பொருளின் பெயர். | இவை உயிர் இல்லாத பொருள்களின் பெயர்கள். |

இவை, தேவர் மக்கள் போல உயர் இனத்தைச் சேர்ந்தவை அல்ல. ஆதலால், இவை உயர்வு அல்லாத திணைப் பெயர்கள். அதாவது, **அஃறிணைப் (அல்திணைப்) பெயர்கள்.**

**மனப்பாடம் செய் : மக்கள், தேவர் தவிர மற்ற உயிர் உள்ள பொருள்களின் பெயர்களும், உயிர் இல்லாத பொருள்களின் பெயர்களும் அஃறிணைப் பெயர்களாம்.**

**3. பிழைகளைத் திருத்து :—**

அ. பெரியவாள் பலர் உண்டு.
ஆ. நாயும் பூனையும் பகைவர்.
இ. குயில்கள் கூடு கட்டாது.
ஈ. பசுக்கள் சாதுவான பிராணி.
உ. ஆடு தழையைத் தின்கின்றன.

# 27. ஒழுக்கம்

(பாட்டு)

அன்பை வளர்க்க வேண்டும்;—கிளியே!
அறிவைப் பெருக்க வேண்டும்;
உன்போல் பிறரை எண்ணி—நல்ல
உதவி புரிய வேண்டும். 1

தெய்வ நினைப்பு வேண்டும்;—கிளியே!
தேச நினைப்பு வேண்டும்;
மெய்ம்மை ஒழுக்கம் வேண்டும்;—நெஞ்சில்
வீர வுறுதி வேண்டும். 2

அன்னைசொல் கேட்க வேண்டும்;—தந்தை
ஆணைக் கிணங்க வேண்டும்;
தன்னை வணக்க வேண்டும்;—பிறர்
தம்மை மதிக்க வேண்டும். 3

ஆசிரியர்க்க டங்கிக்—கிளியே!
அறிவை வளர்க்க வேண்டும்;
தேசம் வாழும் தொழிலில்—மிக்க
திறமை ஓங்க வேண்டும். 4

—யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்

# 28: கடிதங்கள்

## 1

### ஆசிரியர்க்கு எழுதிய கடிதம்

25, வள்ளுவர் தெரு,
வண்ணையம்பதி,
சென்னை, 10-9-'52.

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம்!

உங்கள் பழைய மாணவியும், என் அக்காளுமாகிய இளவரசிக்கு நாளை மறு நாள் திருத்தணிகையில் திருமணம் நடைபெறுகின்றது. அதற்கு நாங்கள் இன்றே புறப்பட்டுச் செல்கின்றோம். ஆதலால், எனக்கு இன்று முதல் நான்கு நாட்கள் ஓய்வு தரும்படி பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

உங்கள் பணிவுள்ள மாணவி,

இசையரசி.

முகவரி :

| |
|---|
| வகுப்பு ஆசிரியர் அவர்கள்,<br>நான்காம் வகுப்பு,<br>இராசமன்னர் செட்டியார் ஆரம்பப் பள்ளி,<br>புதுத் தெரு, சென்னை. |

## 2

### நண்பனுக்கு எழுதிய கடிதம்

386, திருவொற்றியூர்ப் பெரிய சாலை,
தண்டையார் பேட்டை,
சென்னை, 5-10-'52.

அன்பு மிக்க ஆனந்தா,

இங்கு அனைவரும் நலம். அவ்விடம் நலம் அறிய விரும்புகிறேன். காலாண்டுத் தேர்வில் நீ எல்லாப்

பாடங்களிலும் உயர்ந்த மதிப்பெண் பெற்றதை அறிந்து நான் பெரிதும் மகிழ்கின்றேன்! நானும் உன்னைப்போலவே கணக்குத் தவிர எல்லாப் பாடங்களிலும் மிக உயர்ந்த மதிப்பெண்களே பெற்றேன். கணக்கில் மட்டும் 25 மதிப்பெண்தான் கிடைத்தது. இது பற்றி யான் பெரிதும் வருந்துகிறேன். ஆயினும், அடுத்த தேர்வில் கணக்கில் முதல் மதிப்பெண் வாங்க நிச்சயித்து, மிகவும் ஊக்கத்துடன் உழைத்து வருகிறேன்.

நீ என்னை இந்த டிசம்பர் விடுமுறையில் உனது ஊருக்கு வரும்படி அழைத்ததற்கு நன்றி கூறுகி-றேன். தமிழ்நாட்டுச் சிறந்த சிவதலங்களுள் ஒன்று-கிய உனது ஊருக்கு இவ்விடுமுறையில் வருவது திண்ணம். இதற்கு இடையில் அடிக்கடி கடிதம் எழுதிக்கொண்டிரு. என் வணக்கத்தை உன் பெற்றோர்க்குத் தெரிவி.

உன் அன்புள்ள நண்பன்,

**கா. அன்பழகன்.**

முகவரி:

திரு. ஆனந்த வேலர்,
நான்காம் வகுப்பு,
போர்டு ஆரம்பப் பள்ளி,
திருக்கழுக்குன்றம்,
செங்கற்பட்டு மாவட்டம்.

## 3

## தந்தையார்க்கு எழுதிய கடிதம்

25, தம்பு செட்டித் தெரு,
சென்னை, 15-10-52.



அன்புள்ள அப்பா,

வணக்கம்! இங்கு அனைவரும் நலம். அவ்விடமுள்ளார் நலம் அறிய விரும்புகிறேன். நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. உங்கள் விருப்பப்படி நான் தினந்தோறும் காலம் தாழ்த்தாமல் பள்ளிக்குச் சென்று வருகிறேன்; பாடங்களையும் கருத்தோடு படித்து வருகின்றேன். காலாண்டுத் தேர்வில் எனது வகுப்பில் நான் இரண்டாமவனாகத் தேறினேன். ஆதலால், ஆசிரியர்கள் என்னிடம் மிகவும் அன்பு காட்டி வருகிறார்கள்.

இங்கு அத்தானும் அக்காளும் சுகமாய் இருக்கிறார்கள். குழந்தை குணசீலன் மகிழ்ச்சியாகவே இருக்கிறான். அன்னையாருக்குக் காய்ச்சல் என்று எழுதியிருந்தீர்கள். அது எப்படி இருக்கிறதென்று அடிக்கடி கடிதத்தின் மூலம் தெரிவிக்கக் கோருகிறேன்.



உங்கள் அன்புள்ள,
த. முருகவேலன்.

முகவரி:

| |
|---|
| திருவாளர் மா. தங்கவேலர் அவர்கள்,<br>36, சந்நிதித் தெரு,<br>காஞ்சீபுரம். |

### அருஞ்சொற்பொருள்:

நலம்—சுகம், முகவரி—விலாசம், தேர்வு—பரீட்சை, மதிப்பெண்—மார்க்கு, உழைத்து—பாடு பட்டு, திண்ணம்—நிச்சயம், ஆவல்—விருப்பம், காய்ச்சல்—சுரம், கோருகிறேன்—வேண்டுகிறேன்.

### பயிற்சி:

அ. வெளியூரில் உள்ள உன் நண்பனுக்கு உனது பள்ளிக்கூடத்தைப்பற்றி விவரித்து ஒரு கடிதம் எழுது.

ஆ. உனக்குப் புத்தகம் வாங்க ஐந்து ரூபாய் வேண்டுமெனத் தெரிவித்து வெளியூரில் உள்ள தாயாருக்கு ஒரு கடிதம் எழுது.

### இலக்கணம்:

### பெயர்ச்சொல் :—

### எண்

**இவற்றைப் படி :—**

அ. மகன் வந்தான்.—மகன் **உயர்திணைப்** பொருளின் பெயர்.

ஆ. மகள் சென்றாள்.—மகள் **உயர்திணைப்** பொருளின் பெயர்.

இ. பசு நின்றது.—பசு **அஃறிணைப்** பொருளின் பெயர்.

ஈ. பெண்கள் பாடினார்கள்—பெண்கள் **உயர்திணையில் பலரைக்** குறிக்கும் பெயர்.

உ. குதிரைகள் மேய்கின்றன -குதிரைகள் **அஃறிணையில் பல** பொருள்களைக் குறிக்கும் பெயர்.

மகன், மகள், பசு—இவை ஒவ்வொன்றும் **ஒரு பொருளைக்** குறிக்கும் பெயர்கள்.

பெண்கள், குதிரைகள்—இவை ஒவ்வொன்றும் **பல பொருள்களைக்** குறிக்கும் பெயர்கள்.

ஒரு பொருளைக் குறிக்கும் உயர்திணைப்பெயரும், அஃறிணைப் பெயரும் **ஒருமைப் பெயர்** எனப்படும். பல பொருள்களைக் குறிக்கும் உயர்திணைப் பெயரும் அஃறிணைப் பெயரும் **பன்மைப் பெயர்** எனப்படும்.

**மனப்பாடம் செய் :**

ஒரு பொருளைக் குறிக்கும் பெயர் **ஒருமை**; பல பொருள்களைக் குறிக்கும் பெயர் **பன்மை**.



## 29. மாபெரும்புலவர் மறைமலையடிகள்

1. நம் தமிழ் நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளாகப் புலவர் எண்ணற்றவர் தோன்றி வந்துள்ளனர். அவர் அனைவரும் நம் தாய்மொழியாம் தமிழ் மொழிக்குத் தொண்டு செய்து புகழுக்கு உரியவர் ஆயினர். அவ்வாறே இக்காலத்திலும் அரும் பெரும்புலவர் பலர் தோன்றினர். அவருள் சிலர் இப்போதும் வாழ்ந்து வருகின்றனர். சிலர் சமீபத்தில் இவ்வுலகை விட்டு மறைந்தனர். அவ்வாறு மறைந்தவருள் ஒருவர் **மறைமலையடிகள்.**

2. 'மறைமலை' என்பது அவருக்குப் பெற்றோர் இட்ட பெயரன்று. பெற்றோர் அவருக்கு வழங்கிய பெயர் **வேதாசலம்** என்பது. இப்பெயர் வேதம் அசலம் என்னும் இரண்டு வடமொழிச்

சொற்களால் ஆனது. தமிழ், வேற்று மொழிச் சொற்களின் உதவி இல்லாமல் தனியே வழங்கும் தன்மையுள்ளது. ஆதலால், தமிழைப் பேசுபவரும், எழுதுபவரும் வேற்று மொழிச் சொற்கள் கலவாமல் பேசவும் எழுதவும் வேண்டும் என்று எண்ணியவர் வேதாசலம். எனவே, தனித் தமிழ் ஆர்வம்கொண்ட அவர், தமது பெயரை **மறைமலை** என்று மாற்றிக்-கொண்டார். ‘வேதம்’ என்னும் வடசொல்லுக்கு ‘மறை’ என்பது தமிழ். ‘அசலம்’ என்னும் வட சொல்லுக்கு ‘மலை’ என்பது தமிழ்.

3. மறைமலையடிகள் தஞ்சை மாவட்டத்தில் உள்ள நாகப்பட்டினத்துக்கு இரண்டு மைல் தொலைவில் இருக்கும் **காடம்பாடி** என்னும் ஊரில் 1876-ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் தந்தையார் பெயர் **சொக்கநாதப் பிள்ளை** என்பது; தாயார் பெயர் **சின்னம்மை.**

4. பள்ளிப் பருவம் வந்த போது மறைமலை நாகையில் உள்ள **வெஸ்லியன் மிஷன் பள்ளியிற்** சேர்க்கப்பட்டார். அவர் தமது பத்தாம் வயதிலேயே தந்தையாரை இழந்தார். ஆயினும், அவர் அன்னையார் அவருடைய கல்வியில் பேரூக்கம் காட்டி அவரைப் படிக்கச் செய்தார். பள்ளியிற் பயின்று வந்த மறைமலை தமிழைத் தனியே படித்-துப் புலமை அடைய வேண்டும் என்று ஆவல் கொண்டார். நாகப்பட்டினத்தில் அக்காலத்தில் புத்தக வணிகராய் இருந்த **நாராயணசாமி பிள்ளை** என்பவர் தமிழிற் பெரும்புலவராய் விளங்கினார். மறைமலையார் பிள்ளையவர்களை அடுத்துத் தமிழைக்

கற்று, ஆசிரியரும் வியக்கும்படி பெரும்புலமை அடைந்தார்.

5. மறைமலையடிகள் வேளாள வகுப்பினர்; சைவ சமயத்தினர். அவருக்குத் தமிழினிடம் இருந்தது போலவே தமது சமயமாகிய சைவத்தினிடமும் மிகுந்த பற்று இருந்தது. அவர் அக்காலத்தில் சென்னையில் வாழ்ந்து வந்த பெருஞ்சைவர் **சோமசுந்தர நாயகரை** நாடி, அவரைத் தம் சமய குருவாகக் கொண்டார்.

6. மறைமலையாருக்குப் பதினெட்டாம் வயது முடிந்த போது, அவர் **சௌந்தரவல்லி** என்ற அழகிய நங்கையைத் திருமணம் செய்துகொண்டார். அப்போது அவர் கல்லூரியில் **எப். ஏ.** வகுப்பில் படித்துக்கொண்டிருந்தார். திருமணம் செய்து கொண்ட பின் தம் குடும்ப பாரத்தை ஏற்கவேண்டியவரானார். ஆதலால், கல்லூரியை விட்டு நின்று விட்டார்.

7. கல்லூரியை விட்ட பிறகு மறைமலையடிகள் திருவனந்தபுரத்தில் இருந்த ஆங்கிலப் பள்ளியொன்றில் தமிழாசிரியராய் அமர்ந்தார். ஆனால், அவ்வூர் அவர் உடல் நிலைக்குப் பொருந்தாமையால், இரண்டரையாண்டுகளுக்குப் பிறகு அவர் அங்கிருந்து தமது ஊருக்குத் திரும்பினார்.

8. திருவனந்தபுரத்தை விட்ட சிறிது காலத்துக்குப் பிறகு, மறைமலையார் சென்னையை அடைந்து, கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் அமர்ந்தார். பல ஆண்டுகள் அங்கிருந்து தமிழ்ப்பணி புரிந்த பின் அவர் சென்னைக்குத்

தெற்கே உள்ள பல்லவபுரத்திற் குடியேறினர். பல்லவபுரம் என்பது இக்காலத்திற் பல்லாவரம் என்று வழங்குகிறது. அங்கு மறைமலையடிகள் '**பொதுநிலைக் கழகம்**' என்னும் 'சமரச சன்மார்க்க சங்கம்' ஒன்றை ஏற்படுத்தினர். அதன் மூலம் மக்களுக்கு ஞான மார்க்கத்தைப் போதித்து வந்தார். அதற்குத் துணையாக ஓர் அச்சுக்கூடத்தை நிறுவி, '**ஞான சாகரம்**' என்னும் பத்திரிகையையும் நடத்தி வந்தார்.

9. அடிகள் பல அரிய நூல்களை இயற்றியும், தமிழ் நாடெங்கும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியும், பத்திரிகைகளிற் கட்டுரைகள் வரைந்தும், தமிழுக்கும் சைவத்துக்கும் தொண்டாற்றி வந்தார். அவர் இயற்றிய நூல்கள் ஐம்பதுக்குமேல் இருக்கும். அவற்றுள், **மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், சகுந்தலை நாடகம், தமிழர் மதம்** என்பன மிகச் சிறந்தவையாகும். இவ்வாறு தமிழுக்கும் தமிழர்க்கும் இடையறாமல் தொண்டு புரிந்த அடிகள் தமது எழுபத்தைந்தாம் ஆண்டில் மறைந்தார். ஆயினும், அவர் இயற்றிய நூல்கள் அழியாப் புகழ் உள்ளவை. அவற்றைப் படித்து அறிவு பெறுதல் நமது கடமையாகும்.

**அருஞ்சொற்பொருள்:**

எண்ணற்றவர்-பலர், தொண்டு-பணி, வழங்கிய-கொடுத்த, வடமொழி-சம்ஸ்கிருதம், கலவாமல்-சேர்க்காமல், மாவட்டம்-ஜில்லா, பருவம்-காலம், பேரூக்கம்-மிகுந்த ஊக்கம், ஆவல்-ஆசை, வணிகர் - வியாபாரி, அடுத்து – நெருங்கி, வியக்கும்படி – ஆச்சரியப்படும்படி, சைவம் – சிவனைத் தொழும் மதம், சமயம்- மதம், சமய குரு-மத குரு, சொற்பொழிவு – பிரசங்கம், நிகழ்த்தி- செய்து, இடையறாமல்-இடை விடாமல்,

பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. மறைமலையடிகளின் பிறப்பிடம் எது?

ஆ. அவருடைய தாய் தந்தையர் பெயர்கள் என்ன?

இ. அடிகளாரின் சாதியும் மதமும் யாவை?

ஈ. அடிகளார்க்கு அவருடைய பெற்றோர் வழங்கிய பெயர் யாது? அதை அவர் எவ்வாறு மாற்றிக் கொண்டார்? ஏன் மாற்றிக்கொண்டார்?

உ. அடிகளார் யாரிடம் தமிழைக் கற்றார்? அவருடைய சமய குரு யார்?

ஊ. அடிகளார் தமிழ் மக்களுக்குப் புரிந்த தொண்டுகள் யாவை?

**2. கீழ் வரும் வாக்கியங்களைத் திருத்து :—**

அ. மறைமலையடிகள் ஆங்கிலத்தையும் தமிழிலும் வல்லவர்

ஆ. அவர் தனித்தமிழிலும் சைவ மதத்தையும் மிகவும் பற்றுக்கொண்டவர்.

இ. இராமனும், சீதையும், இலக்குவனும் காட்டைச் சென்றன.

ஈ. வீட்டைக் கட்டி அதைக் குடி புகுந்தான்.

**இலக்கணம் :**

**பெயர்ச்சொல்—பால்**

**இவற்றைப் படி :—**

அ. **கந்தன்** படிக்கிறான். - கந்தன் என்னும் பெயர் **ஆணைக்** குறிக்கிறது.

ஆ **வள்ளி** பாடுகிறாள். – வள்ளி என்னும் பெயர் **பெண்**ணைக் குறிக்கிறது.

இ. **மக்கள்** வந்தார்கள் - மக்கள் என்னும் பெயர் ஆண்கள் **பலர்**, அல்லது பெண்கள் **பலர்**, அல்லது ஆண்களும் பெண்களும் ஆகிய **பலரைக்** குறிக்கிறது.

ஈ. பறவை பறக்கிறது. - பறவை என்னும் பெயர் ஆணையும் குறிக்கவில்லை; பெண்ணையும் குறிக்கவில்லை. அது ஒரு பொருளை மட்டும் குறிக்கிறது.

உ. பறவைகள் பறந்தன. – பறவைகள் என்னும் பெயர் ஆணையும் குறிக்காமல், பெண்ணையும் குறிக்காமல் பலவற்றைக் குறிக்கிறது.

**மனப்பாடம் செய் :**

ஆணைக் குறிக்கும் பெயர் **ஆண் பால் பெயர்**; பெண்ணைக் குறிக்கும் பெயர் **பெண் பால் பெயர்**; ஆண்கள் பலர், பெண்கள் பலர், ஆண்களும் பெண்களும் சேர்ந்த பலரைக் குறிக்கும் பெயர் **பலர் பால் பெயர்**. உயர்திணையல்லாத ஒரு பொருளைக் குறிக்கும் பெயர் **ஒன்றன் பால் பெயர்**. உயர்திணையல்லாத பல பொருள்களைக் குறிக்கும் பெயர் **பலவின் பால் பெயர்**.

**பால்** என்பதற்குப் **பகுப்பு** என்பது பொருள்.



## 30. நவராத்திரி

1. **'நவராத்திரி'** என்னும் சொல்லுக்கு **'ஒன்பது இரவுகள்'** என்பது பொருள். நம் நாட்டில் வாழும் இந்துக்கள் வருடந்தோறும் கொண்டாடும் விழாக்களுள் நவராத்திரி விழாவும் ஒன்றாகும். இது தமிழ் நாட்டில் மட்டுமேயன்றி, வடநாட்டிலும் கொண்டாடப்படுகிறது. ஆனால், இது தமிழ் நாட்டில் ஒன்பது இரவுகள் கொண்டாடப்படுவதால் **'நவராத்திரி'** என்றும், வடநாட்டில் பத்து இரவுகள் கொண்டாடப்படுவதால் **'தசரா'** என்றும் வழங்கப்படுகிறது.

2. அமாவாசைக்கு மறு நாள் முதல் பதினான்கு நாட்கள் வளர்பிறை நாட்கள் எனப்படும். பதினைந்தாம் நாள் பௌர்ணமி. பௌர்ணமிக்கு மறு நாள் முதல் பதினான்கு நாட்கள் தேய்பிறை நாட்கள் எனப்படும். இந்த நாட்கள் எல்லாம் **திதிகள்** எனப்படும். **திதிகள் பதினான்கு** பிரதமை, துவிதியை, திரிதியை, சதுர்த்தி, பஞ்சமி, சஷ்டி, சப்தமி, அஷ்-

டமி, நவமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி, சதுர்த்தசி என்பன. ஒவ்வோராண்டிலும் புரட்டாசி மாதத்து அமாவாசை கழித்த மறுநாள் பிரதமை தொடங்கி நவமி வரை ஒன்பது நாட்களும் நவராத்திரி நாட்களாகும்.

3. மக்கள் பெருமையுடன் வாழ்வதற்கு **வீரம், செல்வம், கல்வி** ஆகிய மூன்றும் மிகவும் முக்கியமானவை. இந்துக்களின் கொள்கைப்படி மக்களுக்கு வீரத்தையும் வெற்றியையும் தரும் தெய்வம் **துர்க்கை;** செல்வத்தையும், ஆரோக்கியத்தையும் அளிக்கும் தெய்வம் **இலக்குமி;** கல்வியையும் அறிவையும் வழங்கும் தேவதை **கலைமகள்.** இவற்றைப் பெறுவதற்காகவே பண்டைக் காலம் முதல் நம் நாட்டு இந்துக்கள் நவராத்திரி விழாவில் இத்தேவதைகளை வணங்கி வழிபட்டு வருகின்றார்கள்.

4. நவராத்திரித் தினங்களாகிய ஒன்பது நாட்களில் முதல் மூன்று நாட்களில் துர்க்கையையும், அடுத்த மூன்று நாட்களில் இலக்குமியையும், இறுதி மூன்று நாட்களில் கலைமகளையும் பூசிப்பது வழக்கம்.

5. நவராத்திரி விழா, பண்டைக் காலத்தில் தமிழ் மன்னர்களால் ஒரு கலை விழாவாய்க் கொண்டாடப்பட்டு வந்தது. அவ்விழாக் காலத்தில் அரசர் தமது கொலு மண்டபத்தை நன்கு அலங்கரித்துக் கொலு வீற்றிருப்பர். அக்காலைத் தமிழ்ப் புலவர்களும், மற்றக் கலைவாணர்களும் நாட்டின் நானா பக்கங்களிலிருந்து வந்து அரச அவையில் தத்தம் புலமையை விளக்குவார்கள். அவர்களுக்கு அரசர் அவர்களின் திறமைக்கு ஏற்றபடி பரிசுகள் வழங்குவார். இவ்வழக்கம் சமீப காலம் வரையில் திருவாங்-

கூர், கொச்சி, மைசூர், புதுக்கோட்டை ஆகிய சம்ஸ்தானங்களில் இருந்து வந்தது.

6. அரசர்கள் நவராத்திரி விழாவைக் கொண்டாடியதற்கும், மற்ற மக்கள் கொண்டாடியதற்கும் வேற்றுமை உண்டு. நவராத்திரித் தினங்களில் முதல் நாளாகிய பிரதமையன்று துர்க்கை, இலக்குமி, கலைமகள் ஆகிய மூன்று தேவிமார்களின் சிலைகளையோ, படங்களையோ கொலு வீற்றிருக்கச் செய்வார்கள். அக்கொலு மண்டபத்தில் அழகிய பதுமைகளும், கண் கவரத்தக்க வேறு பொருள்களும் இடம் பெறும். தினந்தோறும் மாலை நேரத்தில் அக்கொலு மண்டபத்தில் மங்கையரும், சிறுமியரும் கூடியிருந்து இசை பாடி இன்புறுவர். கொலுவைக் காண வருபவர்க்குப் புஷ்பம், வெற்றிலை பாக்கு, பழம், தேங்காய், சுண்டல் முதலியன அளிக்கப்படும்.

7. பெண் மக்கள் வீடுகளில் நவராத்திரி விழாக் கொண்டாடுவதன்றிக் கோவில்களுக்கும் சென்று வருவார்கள். கோவில்களில் இசை விருந்துகளும், புராணப் பிரசங்கங்களும், சொற்பொழிவுகளும் நடை பெறும். ஆண் மக்கள் இவற்றைக் கேட்டு மகிழ்வார்கள்.

8. விழாவின் கடைசி நாளாகிய மகா நவமித் தினம் சிறப்பாகக் கொண்ட்டாடப்படும். அன்று பகல் ஆண்களும் பெண்களும் தத்தமக்குரிய பொருள்களைக் கொலுவில் வைத்துப் பூசிப்பார்கள். கற்றவர் புத்தகங்களை வைத்துத் தமது கல்வி மேலும் மேலும் ஓங்க வேண்டும் என்று பூசிப்பர். ஆதலால், அத்தினம் **சரஸ்வதி பூசைத் தினம்** என்று வழங்கலாயிற்று. தொழிலாளர் தத்தம் ஆயுதங்களை வைத்

துப் பூசிப்பர். அதனால், அத்தினம் **ஆயுத பூசைத் தினம்** என்றும் வழங்கலாயிற்று.

9. வடநாட்டில் மகாநவமித்தினம் இவ்வளவு சிறப்பாகக் கொண்டாடப்படுவதில்லை. அங்குக் கொண்டாடப்படும் தசரா விழா என்னும் பெயருக்குத் தக்கபடி பத்தாம் நாளாகிய **தசமித்தினம்** சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அத்தினத்தில் எந்தக் காரியத்தை மேற்கொண்டாலும் வெற்றி கிடைக்கும் என்பது அவர்கள் நம்பிக்கை. ஆதலால், அத்தினம் **விஜய தசமி** என்று வழங்கப்படுகிறது. 'விஜயம்' என்னும் சொல் 'வெற்றி' என்னும் பொருளுடையது. ஆகையாலேதான் இன்றும் தமிழ் நாட்டில் வாழும் இந்துக்கள் தங்கள் பிள்ளைகளை விஜய தசமியன்று பள்ளியில் வைக்கிறார்கள்.

10. நவராத்திரி ஒரு கலை விழா. ஆதலால், இவ் விழாவைக் கொண்டாடித் தமிழையும் கலைகளையும் வளர்க்க நாம் முன் வரவேண்டும்.

**அருஞ்சொற்பொருள் :**

விழா–கொண்டாட்டம், செல்வம்–பொருள், தெய்வம்–கடவுள், வழிபடல்–பூசித்தல், இறுதி–கடைசி, கலை–சாஸ்திரம், கொலு மண்டபம்–அரசர் வீற்றிருக்கும் சபை, வீற்றிருப்பார்–அமர்ந்திருப்பார், கலைவாணர் – சாஸ்திரம் வல்லவர், அவை – சபை, புலமை–கல்வித் திறமை, சிலைகள்–உருவப் பதுமைகள், பதுமைகள்–பொம்மைகள், மங்கையர்–பெண்கள், இசை–சங்கீதம், இன்புறுவர்–மகிழ்வர், உரிய–சொந்தமான, ஓங்க–வளர.

**பயிற்சி :**

1. **விடை எழுது :—**

அ. 'நவராத்திரி' என்னும் சொல்லுக்குப் பொருள் என்ன?

ஆ. நவராத்திரி விழா ஏன் கொண்டாடப்படுகிறது?

இ. இவ்விழாவுக்கு வடநாட்டில் வழங்கும் பெயர் யாது? அங்கு அப்பெயர் வழங்கக் காரணம் என்ன?

ஈ. தமிழ் நாட்டில் நவராத்திரி எவ்வாறு கொண்டாடப் படுகிறது?

உ. பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டு அரசர் இவ் விழாவை எவ்வாறு கொண்டாடினர்?

## இலக்கணம் :

### பெயர்ச்சொல் — இடம்

இவற்றைப் படி :—

**நான்** படிக்கிறேன்.—நான் என்னும் பெயர் பேசுபவன் தன்னைக் குறிக்கிறது. ஆதலால், இப்பெயர் **தன்மை இடம்** பெற்றது.

**நீ** படிக்கிறாய்.—**நீ** என்னும் பெயர் பேசுபவன் முன் நிற்பவனைக் குறிக்கிறது. ஆதலால், இப்பெயர் **முன்னிலை இடம்** பெற்றது.

**அவன்** படிக்கிறான்:—**அவன்** என்னும் பெயர் பேசுபவன் பேச்சுப் படர்ந்து செல்லும் இடம். ஆதலால், **படர்க்கை இடம்** பெற்றது.





# 31. நூல் நூற்றல்

## (குடிசைத் தொழில்)

1. எல்லாத் தொழில்களுள்ளும் உழவுத் தொழிலும், நெசவுத் தொழிலும் உன்னதமானவை என்பது எவரும் மறுக்க முடியாதது. இத்தொழில்களுள் நெசவுத் தொழிலுக்கு நூல் இன்றியமையாதது. நூலைப் பற்றிய விவரங்களை இப்பாடத்தால் அறியலாம்:

2. நூல் நூற்பதற்குப் பருத்தி தேவை. ஒரு வகைச் செடியின் காயினுள் இருக்கும் மிகவும் நுட்பமான வெள்ளிய நார் போன்ற பொருளே **பருத்தி** எனப்படுவது. கரிசல் மண்ணில் பருத்தி நன்கு பயிராகும். பருத்திக்கு நீர் அதிகம் தேவையில்லை. ஆனால், காய் முதிரும் தருணத்தில் வெப்பமும் வரட்சியும் அவசியம். பருத்திக்குப் பகை பனி. பருத்தி காய்ந்திருக்கும் போது பனி பெய்தால், காய்கள் உதிர்ந்துவிடும்.

3. பருத்திக்காய் முதிர்ந்து வெடித்த பின், பருத்தி பறிக்கப்படும். நான்கு ஐந்து முறை இதைப் பறிப்பதுண்டு. பருத்தி பறிக்கப்பட்ட பிறகு பொதிகளாக்கப்பட்டுக் கொட்டை நீக்கும் தொழிற்சாலைகளுக்கு அனுப்பப்படுவது வழக்கம். அங்குக் கொட்டை நீக்கும் இயந்திரத்தில் பருத்தியைக் கொடுத்தால், கொட்டை வேருகவும், பருத்தி வேருகவும் பிரிந்து விழும். கொட்டை நீக்கப்பட்ட பருத்திக்குப் **பஞ்சு** என்பது பெயர். கொட்டை நீக்கும் தொழில் குடிசைத்தொழிலாக நடைபெறும் இடங்களில், கொட்டை நீக்கும் கருவிகள் இருக்கும். அவற்றில் இரண்டு உருளைகளும், உருளைகளில் பொருத்தப்பட்ட கைப்பிடியும் இருக்கும். பருத்தியை உருளைகளின் இடையில் வைத்துக் கைப்பிடியைச் சுழற்றினல் கொட்டை பிரிந்துவிடும்.

4. கொட்டை நீக்கப்பட்ட பஞ்சு சுத்தம் செய்யப்படும். பிறகு அதை அடிக்க வேண்டும். பஞ்சு அடிப்பதற்கு **வில்லும் விருடையும்** வேண்டும். விட்டத்திற் கயிற்ருல் கட்டித் தொங்க விட்டிருக்கும் வில்லை இடக்கையால் பற்றிக்கொண்டு, வலக்கையில் விருடையைக் கொண்டு வில்லின் நரம்பை இழுத்துவிட வேண்டும். நரம்பு பஞ்சிற் படுவதனுலும், விருடையால் இழுக்கப்படும் நரம்பு அதிர்ச்சி அடைவதனுலும் பஞ்சு அடிபடும். அப்போது அதன் **துசும்பு** தனித்தனி பிரியும். பருத்தியின் நாருக்குத் **துசும்பு** அல்லது **சிம்பு** என்னும் பெயர்கள் வழங்குகின்றன. தூய வெண்மை நிறம் உள்ளதும், நீண்ட சிம்புள்ளதுமான பஞ்சு உயர்ந்ததாக மதிக்கப்படுகிறது.

5. பஞ்சு அடிக்கப்பட்ட பிறகு பட்டைகளாக் கப்படும். இதற்கு **மணை**, **குச்சி** என்னும் கருவிகள் வேண்டும். பஞ்சை மணையின்மீது பரப்பி, அதன் மீது குச்சியை வைக்க வேண்டும். பிறகு **கைக் கட்டை** என்னும் மற்றொரு பலகையைக் குச்சி யின் மீது வைத்து உருட்ட வேண்டும். ஒரே பக்க மாக இரண்டு மூன்று முறை உருட்டிய பிறகு குச்சியை இழுக்க வேண்டும். இழுத்த பின் பஞ்சு சுருணையாகக் காணப்படும். இதற்குத்தான் **பட்டை** என்பது பெயர்.

6. நூல் நூற்பதற்கு இப்பட்டைகளே உப யோகமாகின்றன. நூல் நூற்பதற்கு இரண்டு கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றுள் ஒன்று, **கைக்கதிர்** அல்லது **தக்கிளி** ; மற்றொன்று, **இராட்டை** அல்லது **சர்க்கா** எனப்படும். இவ்வாறு நூற்கப்பட்ட நூலைக்கொண்டு கைத்தறியில் ஆடை நெய்யப்படும்.

7. பண்டைக் காலத்தில் நமது நாட்டில் வீடு தோறும் நூல் நூற்கும் தொழில் நடை பெற்று வந்தது. இயந்திரங்கள் தோன்றிய பின் இத் தொழில் நசித்துவிட்டது. காந்தியடிகள் நசித்துப் போன குடிசைத் தொழில்களுக்குப் புத்துயிர் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்தியபடியால் இத்தொழில் மீண்டும் ஓரளவுக்கு நடைபெற்று வருகிறது. இவ்வாறு கையால் நூற்ற நூலைக் கொண்டு நெய்யப்பட்ட ஆடையே இக்காலத்தில் **கதர் ஆடை** என்று வழங்கப்படுகிறது.

# 32.. நூல் நூற்றல்

(பாட்டு)

ஆடு ராட்டே ! ஆடு ராட்டே !
சுழன்று சுழன்றுசுழன் றுடுராட்டே !

பட்டணத்து வீதிகளில் சுற்றி அலைந்து-மிகப்
பாடுபடும் கிராமத்துப் பத்தினிப் பெண்கள்
இட்டமுடன் தம் நடிசை நிழல்இருந்தே-நூல்
இழைத்துப் பிழைப்பாரென் றுடுராட்டே ! 1

வம்பளந்து வீண்பொழுது போக்கமாட்டார்;-பெண்கள்
வாசலிலே கூட்டமிட்டுப் பேசமாட்டார்.
துன்பமில்லை சோம்பியவர் தூங்க மாட்டார்;-குடி
சுத்தப்படும் என்றுசொல்லி ஆடுராட்டே ! 2

அன்னியர்கள் நூல்கொடுத்து ஆடைகொடுத்து-நம்
அங்கத்தை மூடுகின்ற பங்கம்ஒழியும் ;
கன்னியர்கள் நூற்கப்பல காளையர்நெய்ய-நாம்
காத்துக்கொள்வோம் மானமென்று ஆடு ராட்டே ! 3

— நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை

அருஞ்சொற்பொருள் :

உன்னதமானவை—சிறந்தவை, இன்றியமையாதது—இல்லாமல் முடியாதது, முதிர்தல்—முற்றுதல், தருணம்—சமயம், பொதிகள்—மூட்டைகள் அல்லது கட்டுக்கள், நசிந்து—அழிந்து, புத்துயிர் – புதுத் தோற்றம். இட்டமுடன் – இஷ்டமுடன், இழைத்து—நூற்று, அங்கம்—உடல், பங்கம்—அவமானம், காளையர்—ஆண்கள்.

## பயிற்சி :

1. **விடை எழுது :—**

அ. பருத்தி நன்ருய் விளைவதற்கு என்ன சாதனங்கள் வேண்டும்?

ஆ. பஞ்சு என்பது எதற்குப் பெயர்?

இ. பஞ்சு அடிப்பது எவ்வாறு நடைபெறுகிறது?

ஈ. 'பட்டை போடுவது' என்பது என்ன?

உ. நூல் எக்கருவிகளால் நூற்கப்படுகிறது?

ஊ. நாமக்கல் கவிஞர் நூல் நூற்பதால் என்ன நன்மைகள் உண்டு என்று கூறுகிருர்?

2. **இதைத் தெரிந்துகொள் :—**

அ. பஞ்சு வெண்மை நிறமானது.

ஆ. இராட்டினம் சுழலுகின்றது.

இவை இரண்டும் வாக்கியங்கள். ஒவ்வொரு வாக்கியத்தின் முடிவில் ஒரு **புள்ளி** இருப்பதைப் பார். இதற்கு **முற்றுப் புள்ளி** என்பது பெயர். **வாக்கியத்தின் இறுதியில் முற்றுப்புள்ளி** வைக்க மறவாதே.

3. **கீழ்வரும் வாக்கியங்களுக்கு முற்றுப் புள்ளிகள் இடுக :-**

ஆடை நெய்ய நூல் வேண்டும் நூல் பஞ்சால் நூற்கப்படுகிறது கொட்டை நீக்கிய பருத்திக்குப் பஞ்சு என்பது பெயர் பஞ்சு அடிக்க வில்லும் விருடையும் தேவை அடித்துச் சுத்தம் செய்யப்பட்ட பஞ்சு பட்டைகளாக்கப்படும்

# செய்யுட்பாடம்

## I. தமிழ்

வாழ்க நிரந்தரம்! வாழ்க தமிழ்மொழி!
வாழிய! வாழியவே!
வான மளந்த தனைத்து மளந்திடும்
வண்மொழி வாழியவே!
ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி
இசைகொண்டு வாழியவே!
எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே!

— பாரதியார்

குறிப்புரை :

நிரந்தரம்–எப்போதும்; வானம் அளந்தது–எல்லாப்பொருளும் எல்லாக் கலையும், வண்மொழி–வளம் பொருந்திய பாஷை, வைப்பு–நிலம், தன் மணம்–தனது புகழ், வீசி–பரப்பி, இசை–புகழ்.

## II. நீதி

### 1. விவேக சிந்தாமணி

பயனற்றவை

ஆபத்துக் குதவாப் பிள்ளை,
அரும்பசிக்(கு) உதவா அன்னம்,
தாபத்தைத் தீராத் தண்ணீர்,
தரித்திரம் அறியாப் பெண்டிர்,
கோபத்தை அடக்கா வேந்தன்,
குருமொழி கொள்ளாச் சீடன்,
பாபத்தைத் தீராத் தீர்த்தம்,
பயனில்லை ஏழுந் தானே. 1

குறிப்புரை :

அன்னம்–சோறு, தாபம்–தாகம், பெண்டிர்–மனைவி, வேந்தன்–அரசன், கொள்ளா–ஏற்றுக்கொள்ளாத, சீடன்–மாணவன்.

### அன்பில்லா விருந்தின் தன்மை

ஒப்புடன் முகம்ம லர்ந்தே உபசரித்(து) உண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலும் உண்பதே அமுதம் ஆகும்;
முப்பழ மொடுபா லன்னம் முகம்கடுத் திடுவ ராயின்,
கப்பிய பசியி னோடு கடும்பசி யாகுந் தானே. 2

### குறிப்புரை :

ஒப்புடன்-மனவிருப்புடன், முகம் மலர்ந்து—முகத்தில் மகிழ்ச்சியை வெளிப்படுத்தி, முப்பழம்—மா, பலா, வாழை; முகம் கடுத்து—முகம் சுளித்து, கப்பிய பசி—(முன்னமே) பற்றிக்கொண்டிருந்த பசி, கடும்பசி—கொடிய பசி.

### கல்லாதவரும் கற்றோரும்

தண்டா மரையின் உடன்பிறந்தும்
தண்தேன் நுகரா மண்டூகம்;
வண்டே கானத் திடையிருந்தும்
வந்தே கமல மதுவுண்ணும்,
பண்டே பழகி யிருந்தாலும்
அறியார் புல்லர் நல்லோரை;
கண்டே களித்தங்(கு) உறவாடித்
தம்மிற் கலப்பர் கற்றோரே. 3

### குறிப்புரை :

தண்டாமரை (தண் + தாமரை)-குளிர்ச்சி பொருந்திய தாமரை, நுகரா—உண்ணு, மண்டூகம்—தவளை, கமலம்-தாமரை, மது-தேன், பண்டே—முன்னரே, புல்லர்—கல்லாதவர், உறவாடி—நட்புப் பூண்டு, கலப்பர்-மனம் கலந்த நண்பராவர்.

### துஷ்டருக்குப் புத்தி கூறினல் துன்பம் வரும்

வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தான்ஒரு நெறிசொலத் தாண்டிப் பிய்த்திடும்;
ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக் (கு) உரைத்திடில் இடர தாகுமே! 4.

### குறிப்புரை :

வானரம்—குரங்கு, தூக்கணம் - தூக்கணங்குருவி, நெறி-நீதி அல்லது நல்வழி, தாண்டி — பாய்ந்து, பிய்த்திடும் — (குருவியின்

கூட்டைப்) பிய்த்து வீசிவிடும், நவின்ற– (பெரியோரால் உயர்ந்தவை என்று) சொல்லப்பட்ட, ஈனருக்கு–இழிந்தவர்க்கு, இடர்–துன்பம்.

### அற்பர் இயல்பு

பெருத்திடு செல்வமாம் பிணிவந்(து) உற்றிடில்
உருத்தெரி யாமலே ஒளிம ழுங்கிடும்;
'மருத்துள தோ'எனில், வாக டத்(து)இலை;
தரித்திரம் என்னுமோர் மருந்தின் தீருமே! 5.

### குறிப்புரை :

பெருத்திடு-அதிகமான, பிணி–நோய், வந்து உற்றிடில்-வந்து அடைந்தால், உரு–(முன்னே வருபவர்)உருவம், ஒளி–(கண்)பார்வை, மழுங்கிடும்–குறையும், மருத்து-மருந்து, வாகடம்–வைத்திய நூல், தரித்திரம்–வறுமை.

## 2. சதகத்திரட்டு

### குறிப்பறிதல்

மனதிற் கடும்பகை முகத்தினுல் அறியலாம்;
மானிலப் பூடுகளெலாம்
மழையினுல் அறியலாம்; நல்லார்பொ லார்தமை
மக்களால் அறியலாகும்;

கனமருவு சூரரைச் சமரினுல் அறியலாம்;
கற்றவொரு வித்துவானைக்
கல்விப்ர சங்கத்தி னுலறிய லாம்; குணங்
களைநடையி னுல்அறியலாம்;

தனதகம் அடுத்தது பளிங்கினுல் அறியலாம்;
சாதிசொல் லால்அறியலாம்;
தருநீதி கேள்வியால் அறியலாம்; பிணிகளைத்
தாதுக்க ளால்அறியலாம்;

வனசவிக சிதவதன பரிபூர ஞானந்த
வால்வடி வானவேலா!
மயில்ஏறி விளையாடு குகனே!புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே!

### குறிப்புரை :

மாநிலம்-பூமியிலுள்ள, பூடு-புல் முதலியன, பொலார்-துஷ்டர், கனம்—பெருமை, மருவு-பொருந்திய, சமர்-போர், பிரசங்கம்—பேச்சு, தனதகம்-தன்னிடத்தில், அடுத்தது—சார்ந்த பொருளை, பளிங்கு-கண்ணாடி, தருநீதி—(நூல்களால்) தரப்பட்ட நீதிகளை, கேள்வி-பெரியோர் கூறும் அறவுரை, பிணி-நோய், நாது—நாடி, வனசம்—தாமரை, விகசிதம்-மலர்ந்த, வதனம்-முகம், பரிபூரணம்—நிறைவான, வால வடிவு—இளமையும் அழகும், புல் வயல் என்பது சோழநாட்டில் புதுக்கோட்டையை அடுத்துள்ள முருகன் தலம்.

### உயர்ந்தவர் நட்பு

கதிரவன் உதிப்பதெங் கேநளினம் எங்கே
களித்துளம் மலர்ந்த(து) என்ன ?
கார்மேகம் எங்கே ? பசுந்தோகை எங்கே ?
கருதிநட் பானதென்ன ?

மதியம்எங் கே?பெருங் குமுதமெங் கே?முகம்
மலர்ந்துமகிழ் கொண்டதென்ன ?
வல்லிரவு விடிவதெங் கேகோழி எங்கே ?
மகிழ்ந்துகூ விடுதலென்ன ?

நிதியரசர் எங்கே இருந்தாலும் அவர்களொடு
நேசமொன் றுயிருக்கும்.
நீதிமிகு நல்லோர்கள் எங்கிருந் தாலுமவர்
நிறைபட்சம் மறவார்கள்காண் !

மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவுசோ ணாட்டதிபனே!
மயிலேறி விளையாடு குகனே!புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே !

— குமரேச சதகம்

### குறிப்புரை :

கதிரவன்—சூரியன், நளினம்-தாமரை, களித்து-மகிழ்ந்து, உளம்-மனம், கார்மேகம்-கரியமேகம், பசுந்தோகை-பச்சை நிறமான இறகுகளை உடைய மயில், மதியம்-சந்திரன், குமுதம்-அல்லிமலர், மகிழ்-

மகிழ்ச்சி, நிதி–செல்வம், நேசம்–அன்பு, நிறை பட்சம்–மிகுந்த அன்பு, வாவி-குளம், புடை-பக்கத்தில், மருவு–பொருந்திய, சோணாடு–சோழநாடு, அதிபன்–தலைவன். இச்சதகம் குருபாததாசர் என்பவரால் பாடப்பட்டது.

### அரியவை

கடலுலகில் வாழுமுயிர் எழுபிறப் பினுள்மிக்க
காட்சிபெறு நரசென்மமாய்க்
கருதப் பிறத்தலரி ததினுமுயர் சாதியில்
கற்புவழி வருதல்அரிது.

வடிவமுடன் அவயவம் குறையாது பிழையாது
வருதலது தனினும்அரிது.
வந்தாலும் இதுபுண்யம் இதுபாவம் என்றெண்ணி
மாசில்வழி நிற்றல்அரிது.

நெடியதன வானதல் அரிததின் இரக்கமுள
நெஞ்சினேன் ஆதல்அரிது.
நேசமுடன் உன்பதத்(து) அன்பனாய் வருதல்இந்
நீள்நிலத்(து) அதினும்அரிதாம்.

அடியவர்க்(கு) அமுதமே! மோழைபூ பதிபெற்ற
அதிபன்எம தருமைமதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே!

### குறிப்புரை :

கடல் உலகில்–கடலால் சூழப்பட்ட உலகில், எழு பிறப்பு-தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன, தாவரம் என்பன; காட்சி-அறிவு, நரசென்மம்–மக்கள் பிறப்பு, கருத–நினைக்க, கற்பு வழி வருதல்-தூய்மையான மரபில் பிறத்தல், வடிவம்-உருவம், அவயவம்-உறுப்பு, குறையாது-குறையாமல், பிழையாது-குற்றமின்றி, மாசில் (மாசு + இல்)– குற்றம் இல்லாத; நெடிய தனவான்-பெருஞ் செல்வன்; நீணிலம் (நீள் + நிலம்)– நீண்ட உலகம்; மோழை பூபதி பெற்ற மதவேள்–மோழைக் கவுண்டன் மைந்தனான மதவேள் கவுண்டன், தரு சதுரகிரி–மரங்கள் நிறைந்த கொல்லிமலை; அறப்பள்ளி என்பது கொல்லி மலையில் உள்ள சிற்றூர். இது சேலம்

ஜில்லாவில் நாமக்கல் என்னும் பட்டணத்துக்குச் சுமார் ஆறு மைல் தொலைவில் உள்ளது. அங்குள்ள சிவபெருமானுக்கு (அறப்பள்ளி ஈசர்) அறப்பளீசர் என்பது பெயர். இச்சதகம் அம்பலவாணக் கவிராயரால் பாடப்பட்டது.

## இதற்கு இது வேண்டும்.

தனக்குவெகு புத்தியுண் டாகினும் வேறொருவர்
தம்புத்தி கேட்கவேண்டும்;
தான்அதிக சூரனே யாகினும் கூடவே
தளசேக ரங்கள்வேண்டும்;

கனக்கின்ற வித்துவான் ஆகினும் தன்னினும்
கற்றோரை நத்தவேண்டும்;
காசினியை ஒருகுடையில் ஆண்டாலும் வாசலில்
கருத்துள்ள மந்த்ரிவேண்டும்;

தொனிக்கின்ற சங்கீத சாமர்த்யன் ஆகினும்
சுதிகூட்ட ஒருவன்வேண்டும்;
சுடர்விளக் காயினும் நன்றாய் விளங்கிடத்
தூண்டுகோல் ஒன்றுவேண்டும்;

அனற்கண்ண னே!படிக சங்கநிகர் வண்ணனே !
ஐயனே ! அருமைமதவேள்
அனுதினமும் மனதில்நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுரதேவனே !

— அறப்பளீசுரசதகம்.

### குறிப்புரை :

சூரன்-வீரமுள்ளவன், தளம்-படை, சேகரம்-கூட்டம், கனக்கின்ற—பெருமையுள்ள, நத்தவேண்டும்-விரும்பவேண்டும், காசினி—பூமி, வாசல்-வாயில், தொனிக்கின்ற—இசையோடு பாடுகின்ற, சுதி-சுருதி, சுடர்-ஒளி, அனல் கண்ணன்-அக்கினியைக் கண்ணாக உடைய சிவபெருமான், படிகம்—பளிங்கு, சங்கம் - சங்கு, நிகர் — ஒத்த, வண்ணன் — நிறம் உடையவன், சிவன் வெண்ணீறு அணிந்து வெண்மை நிறமாய் விளங்குபவன் என்பது கருத்து.

# 3. நல்வழி

ஆற்றுப் பெருக்கற்(று) அடிசுடுமந் நாளுமவ்வா (று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்;—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. 1.

குறிப்புரை :

பெருக்கு—வெள்ளம், அற்று-நீங்கி, ஏற்றவர்க்கு-இரப்பவர்க்கு, நல்கூர்ந்தார்-வறியவர், இசைந்து-மனம் பொருந்தி.

ஒருநாள் உணவையொழி யென்றால் ஒழியாய் ;
இருநாளுக்(கு) ஏல்என்றால் ஏலாய்;—ஒருநாளும்
என்னோ வறியாய்; இடும்பைகூர் என்வயிறே!
உன்னோடு வாழ்தல் அரிது! 2

குறிப்புரை :

ஒரு நாள் உணவை-ஒரு நாள் உண்ணுதற்குரிய உண்டியை, ஒழி—விட்டிரு, ஏல்-ஏற்றுக்கொள், ஏலாய்-ஏற்றுக்கொள்ள மாட்டாய், என்னோ-எனது துன்பம், இடும்பை-துன்பம், கூர்—மிகுந்த.

ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழும்அன்றே!—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்(கு) ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு. 3

குறிப்புரை :

ஆற்றங்கரை (ஆறு + அம் + கரை)-ஆற்றினது அழகிய கரையில் இருக்கிற; அரசு அறிய—அரசனும் அறியும்படி; வீற்றிருந்த-பெருமையாக வாழ்ந்திருந்த; விழும் அன்றே—அழியும் அல்லவா? உழுது உண்டு—பயிர் செய்து அதனால் உணவு உண்டு, ஏற்றம்—உயர்வாகும், ஒப்பு-நிகர், பழுது உண்டு-குற்றம் உண்டு, பணிக்கு-தொழிலுக்கு. (உழுதுண்டு வாழ்வு ஏற்றம்; அதற்கு ஒப்பில்லை)

வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம்: வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது;—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை,பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும். 4

குறிப்புரை :

வெட்டெனவை-சுடுசொற்கள், மெத்தெனவை-இனிய சொற்களை, வேழத்தின்-யானையின்மீது, பட்டு-தைத்து, உருவும்-புதைகின்ற, கோல்-அம்பு, பாயாது-பட்டு உருவாது, நெட்டு இருப்புப் பாரை-நீண்ட இரும்பு கடப்பாரை, நெக்கு விடா-பிளவு படாத, பாறை-கற்பாறை, பசுமரம்-பச்சைமரம்.

ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு. 5

குறிப்புரை :

ஆன-தனக்குரிய, முதலில்-முதற்பணத்தில், மானம் அழிந்து-பெருமை இழந்து, மதி கெட்டு-அறிவு இழந்து, போனதிசை—தான் செல்லும் இடம், நாடு—ஆராய்ந்து அறிவாயாக.

## 4. வாக்குண்டாம்

மடல்பெரிது தாழை மகிழ்இனிது கந்தம்
உடல்சிறியர் என்றிருக்க வேண்டா ;—கடல்பெரிது
மண்ணீரும் ஆகா(து) அதன்அருகே சிற்றூறல்
உண்ணீரும் ஆகி விடும். 1

குறிப்புரை :

தாழை மடல் பெரிது-தாழை மலர் மடலினாற்பெரியது, மகிழ்-(மிகச் சிறிய) மகிழம்பூ, கந்தம் இனிது-(தாழம்பூவைக் காட்டிலும்) மணம் இனிது, மண்ணீர்-உடலைக் கழுவும் நீர், சிற்றூறல் (சிறிய ஊறல்)-சிறிய ஊற்று நீர், உண்ணீர்-பருகுதற்கு ஏற்ற நீர்.

கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித்(து) ஆடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி. 2

### குறிப்புரை :

கானம்—காடு, பாவித்து—மனத்தில் நினைத்து, பொல்லா—அழகில்லாத, கல்லாதான்—(கற்க வேண்டிய முறைப்படி) கல்வியைக் கல்லாதவன்.

அடக்கம் உடையார் அறிவிலர்என்(று) எண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா ;—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு. 3

### குறிப்புரை :

அடக்கம் உடையார்-(கல்வியறிவு நிரம்பியிருந்தும்) அடங்கி இருப்பவரை, கடக்க-வெல்ல, கருத-எண்ண, மடைத்தலையில்—நீர் மடையில், உறுமீன்—(தன் இரையாவதற்கு உரிய) பெரிய மீன், வாடி—சோர்வுற்று.

அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர் ;—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு. 4

### குறிப்புரை :

அற்ற-நீர் வற்றின, அறுநீர்ப் பறவை-நீங்கிப்போகும் நீர்ப் பறவை, உற்றுழி-(துன்பம்) வந்தவிடத்து, தீர்வார்—விட்டு நீங்குவார், உறவல்லர்—உறவினர் ஆகமாட்டார், கொட்டி, ஆம்பல், நெய்தல் என்பன நீர்வாழ் தாவரம், ஒட்டி—(நீங்காது) சேர்ந்திருந்து, உறுவார்—சுகதுக்கங்களை அனுபவிப்பவர், உறவு—உறவினர்.

மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன் ;— மன்னற்குத்
தன்தேசம் அல்லால் சிறப்பில்லை ; கற்றோற்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு. 5

### குறிப்புரை :

மாசற— (மாசு + அற) குற்றம் நீங்க, சீர்தூக்கின்—ஆராய்ந்தால்,

## III. தனிப்பாடல்

### செருப்பின் பயன்

கல்லும் உறுத்தாது ; காலில்முள் தைக்காது ;
எல்லைமார்த் தாண்டன்கு டேருது ;—தொல்லைவரும்
மாலை இருளில் வழிநடக்கக் கூசாது
காலில் செருப்(பு)இருந்தக் கால். 1

குறிப்புரை :

மார்த்தாண்டன்–சூரியன், தொல்லை–துன்பம்

### நமச்சிவாயன் என்ற செல்வனை இகழ்ந்து பாடியது.

புட்டவல் பட்டாணி பொரிதேங் குழலப்பம்
மட்டவிழுந் தோசை வகையுடனே—சட்டமுடன்
ஓயாமற் சோறுகறி உண்டைஉண்டை யாயடைக்கும்
வாயா நமச்சிவா யா ! 2

குறிப்புரை :

பரிசு பெறச் சென்ற புலவனுக்கு ஒன்றும் தாராமல் தானே பல வகைப் பட்சணங்களைத் தின்றுகொண்டிருந்த நமச்சிவாயன் என்ற பிரபுவை அப்புலவன் இகழ்ந்து பாடிய செய்யுள்.

மட்டு அவிழும்–மணம் வீசுகின்ற.

### கைக்குடையின் பெருமை

பகலோன் தெறுகிரணம் பாய்பறவை எச்சம்
மிகமேல் உருதகற்றும்; விண்ணின்—முகிலதனல்
பெய்யுமழை யைத் தடுக்கும் ; பேரழகு மாமொருவர்
கையிற் குடையிருந்தக் கால். 3

குறிப்புரை :

பகலோன்-சூரியன், தெறு கிரணம்-வருத்தும் வெயில், பாய்–பாய்ந்து செல்லும், மேல் உருது–மேலே படாமல், அகற்றும்–நீக்கும், விண்ணில்–ஆகாயத்தில், முகில் அதனல்-மேகத்தால், பேரழகு-மிக்க அழகு.

---

# இந்நூலில் வந்துள்ள புதிய சொற்கள்

(எண், பாட எண்ணைக் குறிக்கும்.)

## பாடம் 1

சீர், முதல்வன், துணை, சாதி, கொடுமை, செழித்திடும், வையம், ஆதரவு, மாண்புற, வளர்ப்பவர், மூடர், உய்வது, ஓர், பணிந்திடும், யாவும், பாருக்குள், அன்பு, முரசு, நிகர், இன்பம், பெருகும், ஏதும், செய்வீர், அருகு.

## பாடம் 2

குடகு, பீடபூமி, இராச்சியம், மாவட்டம், பாய்தல், செழிக்க, கலத்தல், ஏறத்தாழ, அரங்கம், சூழப்பட்ட, நிலப் பகுதி, ஆலயம், அணை, தலைமையானது, நீர்த்தேக்கம், மின் சாரம், தொடர், பகுதி, பெய்கின்ற, கோடை, நீரோட்டம், இராது, கரை, ஊறும், குறுக்கு, தேங்கும், குடைந்து, பெருமை, சரித்திரம், இருப்பிடம், தாலூக்கா, நீர்வீழ்ச்சி, சிற்றூறு, பட்ட ணம், குறிப்பிட்ட, கடமை, அகம், அலர்ந்தது, குவிந்தது, புறம், குறுக்கம், அரம், அறம், அரி, அறி, அறுகு.

## பாடம் 3

வீரம், நுட்பம், விரைந்து, வெயில், கடுமை, நெடுந்தூரம், பிரயாணம், தாகம், அளவில்லை, சாலை, கூர்ந்து, நாவல் மரம், நிரம்ப, ஆனந்தம், சூழ்ந்து, முட்புதர், தணித்தல், நிச்சயித்தல், ஏறு, கட, தின்ன, செலுத்து, இடையே, எட்டியது, எண்ணற் றது, மனமார, அரிய, சமயம், வழிப்போக்கன், தற்செயல், கதி, தைத்து, நோய், பாவம், மதியீனம், கடுங்காற்று.

## பாடம் 4

முற்பகல், பிற்பகல், பழமொழி, தலைப்பு, பொருள், காரியம், பயன், கிட்டாவிட்டால், தீவு, கொந்தளிப்பு, தருணம், வருந்து, கிட்டும், மரக்கலம், இயலாது, கூட்டம், தலைவன், மோது, வழக் கம், வாணிகம், தொல்லை, மிதவை, ஒலி, மாலுமி, இடையூறு, உடைவாள், கயிறு, எறிந்து, நிமித்தம், இருப்பிடம், மறைந் தது, பெருங்காற்று, திக்கு, இடி, சத்தம், ஆபத்து, இறுதிக்காலம்.

## பாடம் 5

பல்லாயிரம், நூல், முதன்மை, தெளிவு, இயற்றியவர், கோவில், நெசவு, மதித்தார், மனைவி, ஒழுக்கம், கணவர், தட்டா தவர், தவசி, தவம், வானம், எச்சம், எரிந்து, சாம்பல், பணி விடை, காலம், தாழ்த்து, கற்பு, ஆற்றல், மடமை, சிந்தனை, மன்னிப்பு, குற்றேவல்.

## பாடம் 7

பண்டை, வமிசம், கைப்பற்று, துறைமுகம், மைந்தர், பட்டம், தொல்லை, சிற்பம், உலோகம், செதுக்கு, குன்றுமல், திரள், மண்டபம், குடை, தேவர், மிருகம், உருவம், களிக்க, அசுரர், இறைவி, திருமால், அவதாரம், தந்தம், வராகம், ரதம், காளை, இலிங்கம், கோலம், கண்ணைக்கவரும், புராணம்.

## பாடம் 8

குள்ளர், கண்டம், வெப்பம், அடர்ந்த, இடைவெளி, குடிசை, விநோதம், கழிகளை, பனை, கூரை, இறைசால், கவிழ்த் தது, பிரதேசம், கனத்த, உடல்வலி, மனவலி, அம்பு, கருவி, முனை, விஷம், தோய்ந்தது, பாய்ந்தது, இறப்பது, நிச்சயம், பறவை, பரவை, இறைச்சி, புசி, தாறு.

## பாடம் 9

விஞ், நல்வாழ்வு, விழா, வரவேற்புரை, மைதானம், மண் மூவந்து, பாக்கியம், அங்கத்தினர், நன்றி, விசித்திரம், அபூர்வம், பற்று, இணை, சுருக்கு, உயிர்நாடி, இளமை, வாய்ந்தது, வளம், செறிந்து, பொறுப்பு, தொன்மை, கலை, பாராட்டு, வைகுந்தம், சிறப்பிடம், கைத்திறன், பண்டம், உருவாக்கு, பிரசித்தி, நிலைக் களன், வாயில், புறம், கால்கள், புதைப்பது, கண்காட்சி, நிலை யம், குயவேலை, திறம்

## பாடம் 10

விளிம்பு, புகைவண்டி நிலையம், தலம், சரிவு, சோலை, மா, பலா, பழுத்து, வானளாவி, புதர், உயிரினம், இன்புறு, ரீங்– காரம், இழிந்து, நுரை, பொழிதல், சொட்டுதல், நீராடு, பாறை, பாசி, அருவி, கம்பம், தட்சிணம், ஈர்க்கும்.

## பாடம் 11

பானம், பண்டம், வெல்லம், கருப்பஞ்சாறு, புழுதி, மஞ்சு கள், கணு, முளை, குருத்து, சந்தை, உரம், சத்து, ஈரம், தேக்கம்,

தேங்குதல், புயற்காற்று, சேதம், சோலை, இனிமை, கரிக்கும், ஆலை, பிழிந்து, காய்ச்சு, நசுங்கி, கொப்பரை, சக்கை, அடுப்பு, எரிக்க, திரண்டு, பாகு, ஆறுதல், இறுகி, ஊற்றி, பழுப்பு, வடி கட்டி, இரசாயனம், வெண்மை.

பாடம் 13

படிப்பகம், உரையாடல், விசேஷம், அறிஞர், தருவி, தினத் தாள், மாணவர்.

பாடம் 14

விரிந்த, சமவெளி, சாடு, கண்ணறை, திட்டு, திடர், மடை, சீப்பு, நிலத்தழல், ஆற்று, ஆயும், ஊறுத, ஓடைகள், நேயமுற, இறைத்து, நெடுக, அல்லும், ஆழி.

பாடம் 15

நீர்நிலை, இறங்கி, ஊன்றிப்பார், மிதந்து, கட்டுமரம், உபா யம், களிமண், மூட்டு, கரி, தோணி, துடுப்பு, மரக்கலம், பாய் மரம், நீராவி, பொறிகள்.

பாடம் 16

அடிப்படை, குமரி, மந்திரி, கார்ப்பொரேஷன், ஸ்டேடியம், பள்ளி, பண்டிதர், கோஷம், இலாக்கா, சாரணர், ஆவல், பூகோளம்.

பாடம் 17

நிழல், சிகை, நகம், கடும்பகல், கதிரவன், பூஞ்சோலை.

பாடம் 19

இழிகுணம், காரியம், நண்பர், இரை, இசை, பாயசம், அலகு, நாணம், வந்தனம், மோசம்.

பாடம் 20

பட்டினம், கிரி, பாளையக்காரர், ஒப்பந்தம், வராகன், நாட் டாண்மை, செல்வாக்கு, ஐக்கியம், அரசு, வரலாறு.

பாடம் 21

தக்காணம், அன்னை, கலைசாஸ்திரம், விஞ்ஞானம், கல்லூரி, ஊக்கம், கிளர்ச்சி.

பாடம் 22

இனம், கலையம், பயன், வயிரம், பாலைவனம்.

பாடம் 23

முடைதல், வாரையாவேன், தும்பு, குருத்து, பதநீர்.

## பாடம் 24

பஞ்சாயத்து, கழிவுநீர், சாக்கடை, அகற்று, நிருணயிக்கப் படும், அலுவலகம், அலுவலர், காரியஸ்தர், வசூல்.

## பாடம் 25

வண்ணம், பசுமை, புள், அச்சம், காத்தல்.

## பாடம் 26

சுதந்தரம், வழக்கம், பணிவிடை, புண்பட்டது, கையாண் டார், துயரம், வேற்றுமை, தொல்லை, நடைமுறை, சமம், பற்றுதல்.

## பாடம் 27

ஒழுக்கம், பெருக்க, நினைப்பு, மெய்ம்மை, அன்னை, ஆணை, இணங்கு, வணக்க.

## பாடம் 28

திருமணம், ஒய்வு, பணிவுடன், முகவரி, நலம். காலாண்டு, தேர்வு, மதிப்பெண், ஊக்கம், திண்ணம், அத்தான், காய்ச்சல், கோருகிறேன்,

## பாடம் 29

மாபெரும், புலவர், மறை, வேதம், அசலம், ஆர்வம், பருவம், பேருக்கம், வியக்கும்படி, வேளாளர், சமயம், நாடி, குருவாக, நங்கை, பாரம், அமர்ந்தார், கழகம், சமரசம், சன்மார்க்கம், ஞானம், மார்க்கம், போதித்தல், சொற்பொழிவு, வரைதல், கட்டுரை, மதம், இடையறாமல், தொண்டு, அழியாப்புகழ், கலவாமல்.

## பாடம் 30

நவராத்திரி, பிறை, திதி, துர்க்கை, இலக்குமி, தேவதை, கலைமகள், பூசிப்பது, கொலுமண்டபம், அக்காலை, கலைவாணர், நாதோபக்கம், அவை, பதுமை, மங்கை, இசை, விஜயம்.



## பாடம் 31

மறுக்க, இன்றியமையாதது, நுட்பமான, நார், முதிரும், வரட்சி, பகை, பொதிகள், இயந்திரம், விருடை, விட்டம், நரம்பு, அதிர்ச்சி, துசும்பு, சிம்பு, தூய, இராட்டை, நெய்தல்.

## பாடம் 32

சுழன்று, அலைந்து, பத்தினி, இட்டமுடன், இழைத்து, வம்பளந்து, அங்கம், பங்கம், கன்னியர், காளையர், மானம்.

---

# VEERA PANDIAN TAMIL VACHAKAM

IV STANDARD

BY

RAJAMBAL GOVINDARAJAN, M.A., L.T.

Edited by

Vidwan: M. V. VENUGOPALA PILLAI
T. S. UMAPATHY, M.A., L.T.



ASSOCIATION PUBLISHING HOUSE
MADRAS-1
1952

[*Price Re. 0-9-0*

WRAPPER PRINTED AT SHANTI PRESS, MADRAS-1